# சிவாஜி

Checked 18-2-47

[illegible]—2—1947

## கலைக்கூடமும் கல்மாளிகையும்





THE "SHIVAJI"—TAMIL WEEKLY (Estd. 1935) PUBLISHED EVERY SUNDAY

சிறிய தொடர் கதை — வா. கோ. பா.

# தோல்வியின் கண்ணீர்

★

## 22

லட்சுமியும் மீனுவும் நெருங்கிய தோழிகளாகிவிட்டனர். இருவரும் ஒரே மாளிகையில் இருந்து கவலையறியாமல் பணத்தை வாரி இறைத்துச் செலவுசெய்து நாகரிக தேவதையின் சகலவித சுகபோகங்களையுமனுபவித்தார்கள்.

எவ்வளவு சொல்லியும் பத்மனுபாவ் சத்திரத்தைவிட்டுவரச சம்மதிக்கவில்லை. "என் உயிருள்ளமட்டும் நான் இங்கேயே தானிருப்பேன். நீ என்னவோ நல்ல நிலைமைக்கு வந்துவிட்டாய். நல்லவனுக ஒருவனைப் பார்த்துக் கலியாணஞ் செய்துகொண்டுவிட்டாயானுல் என மனம் திருப்தியடையும்' என்று அவர் சொன்னர். ஆனல் கலையுலகில் வெகுதூரம் முன்னேறிவிட்ட லட்சுமிபாய்க்கு கலியாணம் எனும் சொல்லைக் கேட்கவே பிடிக்கவில்லை. "என்னுல் அது மட்டும் முடியாதப்பா!..." என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டாள். பத்மனுபராவ் அவள் சொன்னதைக் கேட்டுக் கோபமடைந்தார். அவளிடமிருந்து ஒரு பைசாகூட வாங்க மறுத்துவிட்டார்—"உன் அப்பா செத்துவிட்டான் போ!...இனி என்னைப் பார்க்கவேண்டுமென்று இந்தப் பக்கம் வராதே" என்று சொல்லிவிட்டார்.

ஃ ஃ ஃ

'அப்பா கோபித்துக்கொண்டுவிட்டாரே' என்று முதலில் லட்சுமிக்குக் கொஞ்சம் வருத்தமாகத்தானிருந்தது. ஆனல் நாளடைவில் மீனுவின் விசேஷ புத்திமதிகளால் அது மறைந்துவிட்டது.

அன்று சாயங்கிரம். மீனு யாரோ ஒரு பிரமுகரின் அழைப்பிற்கிணங்க வெளியே சென்றிருந்தாள். லட்சுமிபாய் மாளிகையில் தனியாக இருந்தாள். 5 மணிக்கு ராமநாதன் வந்து சேர்ந்தார். வந்ததும் வாராததுமாக—"சௌதாமினிக்கு—நல்ல யோகம் பிறந்திருக்கிறது" என்றார்.

"பூ!...இதுதானு!...புதிதாக இன்றுதான் பிறந்திருக்கிறதா என்ன" என்றாள் லட்சுமி அலட்சியமாக.

"இல்லை! புதிதாக ஒரு நல்ல சித்திரக்காரர் கிடைத்திருக்கிறார். அவர் கிடைத்திருப்பது நமக்குப் பெரிய அதிர்ஷ்டம் என்றுதான் சொல்லவேண்டும்!"

"அதிர்ஷ்டமென்ன! காசை வீசி எறிந்தால் நூறு சித்திரக்காரர்கள் வேண்டுமானுலும் கிடைப்பார்கள்!"

"இல்லை...தாங்கள் அப்படிச் சொல்லக்கூடாது. ஓவியர் மோகன் என்றால்..."

மோஹன் என்ற பெயரைக் கேட்டதும் லட்சுமிபாய் திடுக்கிட்டாள். பின்பு சமாளித்துக்கொண்டு "அவரைச் சேர்த்துக்கொண்டுவிட்டீர்களா?" என்று அழுத்தமாகக் கேட்டாள்.

"இன்னும் இல்லை. அது சம்பந்தமாகத்தான் பேசவேண்டுமென்று வந்தேன்."

லட்சுமிபாய் சிறிதுநேரம் யோசனையிலிருந்தாள். பின்பு—"இதில் யோசிக்க வேண்டியது என்ன இருக்கிறது?... கெட்டிக்காரர் என்றால் சேர்த்துக்கொண்டுவிடுவதுதானே!"

"சம்பளம் அதிகம் கேட்கிறார்; அதனுல்தான் யோசிக்கவேண்டியிருக்கிறது..."

"எவ்வளவு கேட்கிறார்?"

"இருநூறு."

"ரொம்ப அதிகந்தான். சாமான்யமாக நம்மால் எவ்வளவு கொடுக்கமுடியும்?"

"நூறு கொடுக்கலாம்—அதுவும் நம் சக்திக்கு அதிகந்தான். தற்போது நம் பத்திரிகை ரொம்ப மோசமான நிலையிலிருக்கிறது. மீனுதேவிக்கு எவ்வளவு சொன்னுலும் தெரிவதில்லை. வேண்டியவர்களின் போட்டோக்களையெல்லாம் பிரசுரிக்கவேண்டும்—அவர்களைப் பற்றி வானளாவப் புகழ்ந்து எழுத வேண்டும் என்கிறார். கடைசியில் நம் பத்திரிகைக்கு மதிப்பே இல்லாமல் போய்விட்டது. இனி நான் போட்டோக்களைக் குறைத்துக்கொண்டு மோஹன் அவர்களின் சித்திரங்களால் பத்திரிகையை முன்னுக்குக்கொண்டுவரவேண்டும். மீனுதேவி பணம் கொடுக்கிறோம் என்பதையே பெரிதாக நினைக்கிறாரே தவிர..."

லட்சுமிபாய்க்கு ஒருபுறம் கோபம் வந்தது. மற்றொருபுறம்—சொல்வது நியாயந்தானே—என்று தோன்றிற்று.

"சரி...அவருக்கு இருநூறு கொடுப்பதாகச் சொல்லி அழைத்துவாருங்கள். மீனுதேவிக்குத் தெரியவேண்டாம். சம்பளம் நூறு என்றே இருக்கட்டும். என் சொந்தப் பணத்திலிருந்து நூறு கொடுக்கிறேன்."

"ஆனல்; மோஹன் இதற்குச் சம்மதிக்கவேண்டுமே!"

"நான் சம்மதிக்கவைக்கிறேன். நீங்கள் அவரை அழைத்துவாருங்கள்."

"சரி, நமஸ்காரம்" என்று ஆசிரியர் புறப்பட்டார்.

"மோஹன்! இவ்வளவுநாட்கழித்தாவது உனக்கு என்னிடம் தயை வந்ததே" என்றது லட்சுமிபாயின் மனம்.

## 23

மோஹனுடன் உள்ளே வந்தார் ராமநாதன். லட்சுமிபாய் அவனை வரவேற்பதற்காகப் புது உடையில் காட்சியளித்தாள். மோஹன் சுருக்கமாகத் தன் வணக்கத்தைத் தெரிவித்துவிட்டு அலட்சியமாக அருகிலிருந்த சோபாவிலமர்ந்தான். அவன் லட்சுமிபாயைக்கண்டு சிறிதும் திடுக்கிடவில்லை. ஆனல் லட்சுமிபாய் அவனை முன்பின் அறிந்தவளாகவே காட்டிக்கொள்ளவில்லை. "தாங்கள்தாம் ஓவியர் மோஹனு?" என்று கேட்டாள்.

"ஆமாம்!" என்று சுருக்கமாகப் பதிலளித்தான் மோஹன்.

"சரிதான்...நம் பத்திரிகைக்கு ஒரு சித்திரக்காரர் வேண்டியிருக்கிறது. தங்களுக்கு விருப்பமிருந்தால் தங்களையே வேண்டுமானுலும் எடுத்துக்கொள்கிறோம்."

லட்சுமிபாய் பேசும் தோரணையைக் கண்டு ராமநாதன திடுக்கிட்டார். இவள் பேச்சைக் கேட்டு மோஹன் எங்கேயாவது கோபித்துக்கொண்டு போய்விடப்போகிறான்!...ஒருவள் இவ்வளவு அலட்சியமாகவா பேசுகிறாள்? என்று மனதிற்குள் சொல்லிக்கொண்டார்.

மோஹன் சிரித்துக்கொண்டே பதில் சொன்னன்—"என்னையே சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று விருப்பமிருந்தால் குறைந்தபட்சம் மாதம் இருநூறு கொடுத்தாகவேண்டும்."

"அடேயப்பா! தங்களுக்குச் சேர்ந்துகொள்ள இஷ்டமில்லையானுல் அதை ஸ்பஷ்டமாகச் சொல்லிவிடலாமே!..."

"அப்படியானுல் தாங்கள் கொஞ்சம் சொந்த மனிதராக நடந்துகொள்ள வேண்டும்."

"என்றால்?"

"வேறொன்றுமில்லை — அதாவது தாங்களே எங்கள் ஸ்தானத்திலிருந்தால் ஒரு ஓவியருக்கு எவ்வளவு கொடுக்கலாமோ அதைவிட அதிகமாகக் கேட்கிறீர்கள்!"

"நீங்கள் சொல்லுவதற்கு அர்த்தமில்லை..."

"சற்று மரியாதையாகப் பேசுங்கள். இங்கே யாரும் என்னை 'நீங்கள்' என்று சொல்வது வழக்கமில்லை."

"மன்னிக்கவும், தாங்கள் வீணே காலங்கடத்தாமல் சம்மதமா இல்லையா என்பதைச் சொல்லிவிடுங்கள்."

"மன்னிக்கவும். தங்களுக்கு வேறு எங்கேயாவது அவசர வேலையிருந்தால் போய்விட்டு வாலாம். எங்கள் பத்திரி

(14-ம் பக்கம் பார்க்க.)

# சிவாஜி

ஆசிரியர்: டி. சிவஞானம்

| | | |
|---|---|---|
| மாலை 12 | திருச்சி. 9—2—47<br>வியஹ, தை, 27உ. | மணி 12 |



# சுதந்திரப் பாதையில் கடற்கண்ணிகள்

## முஸ்லிம் லீகும் முடியரசுகளும்

★

இந்தியா ஒரு துரதிருஷ்டம் பிடித்த நாடு. சரித்திரம் ஒரு நூற்றுண்டு காலமாக இங்கே நகர மறுத்துத் தள்ளப்பட்டு நத்தை வேகத்தில் ஊர்ந்து வருகிறது.

கோபால கிருஷ்ண கோகலே, ஸர் பிரோஸ்ஷா மேத்தா போன்றவர்களது "நல்ல மனித"த் தன்மையால் நமக்கு அரசியல் விமோசனம் கிட்டாதென்று தோன்றிய காலத்து திலகரும், மகாத்மாவும், பண்டித நேருவும் நமது அரசியல் வானில் தோன்றினர்கள். விடுதலை இயக்கத்துக்கு அவர்கள் செய்த தியாகமும், பட்ட கஷ்டமும் சொல்லொணுத வேதனை நிரம்பியவைதான்.

ஆனல் சரித்திரம் நகரவில்லை. நகர்ந்துவிடும்போல் தோன்றிய காலத்து ஆளும் வர்க்கத்தின் அரசியல் விஷமங்கள் விட்ட இடத்திற்கே நம்மைத் திரும்பத் திரும்ப இட்டுச் சென்றுள்ளன. அமிருதசரஸ் கொலைகளிலிருந்து ஆகஸ்ட் கொலைகள் வரையில் காலம் பாய்ந்து சென்ற பின்னரும் பூசி மெழுகப்பட்ட பழமையின் தளத்திலேயே தான் நாம் இன்று தங்கியிருக்கிரேம்.

காரணங்கள் தெளிவாகத்தானிருக்கின்றன. விடுதலைவேகம் இன்னும் போதுமான அளவு மக்களிடையே தோன்றவில்லை. அரசியலும், வாழ்க்கையும் பிரிக்க முடியாத இரண்டு அங்கங்கள் என்ற உணர்வு இன்னும் நம்மிடையே ஏற்படவில்லை. பெரிய சுழற் காற்றுகளிலும், சூருவளிகளிலும் சிக்கிய போதெல்லாம் உருவான நமது எதிரொலி வேகங்கள் இணைப்பற்றுத் தனித்தனியே சிதறிப் போய்விட்டன. உடலில் வலுவற்று ஒய்ந்து துவண்டுபோனவன் கொஞ்சம் பலத்தை சேகரித்துக் கொண்டு ஓடுவது, பின் தள்ளாடி விழுவது, மறுபடி மூச்சுப் பிடித்துக் கிளம்புவது என்பது போலத் தான் நமது அரசியலும்.

ஃ ஃ ஃ

இந்தத் தளர்ச்சிக்கு நம்முள்ளே இருக்கும் வியாதிகளே காரணமாகும். இப்படிப்பட்ட கோரமான வியாதிகளுள் ஒன்றுதான் ஜின்னவின் கீழ் இயங்கும் முஸ்லிம் லீக். மதத்தின் பேரால் முஸ்லிம் மக்களை ஒன்றுபடுத்தி அர்த்தமற்ற அரசியல் கனவுகளில் அவர்களைக் கண்மூடித்தனமாக இறங்க வைத்து முட்டுக்கட்டை அரசியலை இயக்கி வந்திருக்கிருர் ஜின்ன. அவரது போக்கிற்கு சக்தி ஊட்டுவதில் பிரிட்டிஷ் ஆளும் வர்க்கம் தனது காரியத்தைத்தான் திறமையாக சாதித்துக்கொண்டது. காங்கிரசின் நல்லெண்ணங்களும், அதன் பலனய் ஏற்பட்ட ராஜதந்திரத் தவறுகளும் அவரையும், அவரது கட்சியையும் கோரமாக வளர்த்து இன்றுள்ள நிலையில் கொண்டுவந்து விட்டன.



முட்டுக்கட்டை புகழ் ஜின்ன

ஃ ஃ ஃ

டிசம்பர் ஆருந்தேதி அறிக்கையைக் காங்கிரஸ் ஏற்றுக்கொண்டு விட்டதாக அதிகார பூர்வமான முறையில் அறிவித்த பின்னரும், காங்கிரஸ் இன்னும் ஏற்கவில்லை என்று தைரியமாக வாதாடும், கொனஷ்டை செய்யும் நிலைக்கு ஜின்னவின் அரசியல் சக்தி இன்று வளர்ந்திருக்கிறது.

காங்கிரசை மாத்திரமா இப்படி ஒதுக்கினர் — மற்ற கட்சிகளும் டிசம்பர் ஆருந்தேதி அறிக்கையை ஏற்றுக்கொள்ளவில்லை என்று அவர் கூறிவிட்டார்! அரசியல் நிர்ணய சபை இனி வேலை செய்வது அர்த்தமற்றதாம் — சட்ட விரோதமானதாம். அதை உடனே கலைத்துவிட வேண்டுமென்று

## லட்சிய சாதனைக்கு திடசக்தி வேண்டும்

★

ஆளும் வர்க்கத்தை வேண்டுகிருர் ஜின்ன. எது எப்படி இருந்தபோதிலும் முஸ்லிம் லீக் அரசியல் நிர்ணய சபைக்குள் நுழையாது என்று தெளிவாக்கிவிட்டார். இது ஒரு பக்கம்.

மற்ருெரு பக்கம் சமஸ்தானதிபதிகள் சண்டப் பிரசண்டமான தீர்மானங்களைச் செய்திருக்கிருர்கள். அவர்களது நிபந்தனைகளைப் பார்த்தால் போகாத ஊருக்கு வழி தேடுவதில்தான் அவர்கள் அக்கறை கொண்டுள்ளதாகத் தெரிகிறது. முடியரசின் சக்தி ஜனங்களிடமிருந்து வந்ததா, கடவுளிடமிருந்து வந்ததா என்ற பிரச்னையில் ஆரம்பித்து—அ. நி. சபை "நல்லபிள்ளை"யாக இருக்கிறதா என்று நிதானித்துப் பார்த்துக்கொண்டு ஒத்துழைப்பதா, இல்லையா என்று முடிவு செய்வது வரையில் தங்கள் "உரிமைகளை" அவர்கள் கழுத்தில் பிடித்துக்கொண்டு ஊசலாட்டம் போடுகிருர்கள்.

ஃ ஃ ஃ

நாட்டில் இப்போதுள்ள அரசியல் நிலை இதுதான். இடைக்கால அரசாங்கம் பொம்மையாக வேலை செய்து வருகிறது. கொஞ்சம் நஞ்சம் இருக்கும் ஜீவனுக்கும் உட்குழப்பம் உலை வைத்துக் கொண்டிருக்கிறது. அரசியல் நிர்ணயசபை லீக், முடியரசுக் கூட்டங்களால் ஒதுக்கப்பட்டிருக்கிறது. நாடெங்கிலும் பொருளாதார நலிவு கோரமாகத் தாண்டவ

(அடுத்த பக்கம் பார்க்க.)

(முன் பக்கத் தொடர்ச்சி)

மாடுகிறது. மக்கள் ஜீவனின்றி நடமாடி வருகிறார்கள்.

நமது அரசியல் முன்னேறுவதற்கு—குறைந்த பட்சம், நகருவதற்கு — உடனடியான தேவைகள் பின்வருமாறு. அ. நி. சபையில் சேர மறுத்துவிட்டதன் மூலம் இடைக்கால சர்க்காரில் இனி இருக்க அர்கதையற்ற முஸ்லிம் லீக் வெளியேற்றப்பட வேண்டும். இதன் மூலம் இடைக்கால சர்க்காரின் அதிகார எல்லைகளுக்கு உருவம் ஏற்படும். ஒத்துழையாமை செய்பவர்களை கவனியாது அ. நி. சபை நடவடிக்கைகள் மேலேறிச் செல்லப் பாதுகாப்பு ஏற்படுத்திக் கொள்ள இடம் வேண்டும். அரசியல் நிர்ணயசபை உருவாக்கும் அரசியலை அமல் நடத்துவதில்தான் சங்கடம் இருக்கிறது.

எல்லாவற்றிலும் முக்கியமாக மக்களிடையே விழிப்பு ஏற்பட வேண்டும். தங்களுக்காகச் செய்யப்படும் காரியங்களின் முக்கியத்தை அவர்கள் உணரவேண்டும். அதிலும் முஸ்லிம்கள் தங்களுக்கு உருப்படியான காரியம் ஒன்றும் செய்யாத கட்சித் தலைமைப் பீடத்தை ஒதுக்கி சரியான தலைவர்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும்.

அ. நி. சபையை இந்திய சுதந்திரக்கப்பலாகக் கொண்டால் முஸ்லிம் லீக்கையும், குடியரசுகளையும், அதன் பாதையில் மிதக்கும் கடற் கண்ணிகளாகக் கொள்ளலாம். கடற் கண்ணிகளை விலக்கிக் கப்பலுக்கு வழி செய்யப்படுமா, அல்லது கப்பலே தொடங்கின துறைமுகத்துக்கும் பின்னிழுக்கப்படுமா என்பது நமது மக்களின் ஊக்கத்தையும், திடசக்தியையும் பொருத்தது.



பிரிட்டிஷார் உண்மையில் இந்திய நலனில்—முன்னேற்றத்தில் அக்கறை கொண்டிருந்தால் முற்போக்கு சக்திகளுக்கு பலமளிக்க வேண்டும்—சமாதானமாக வருங் கால சுதந்திர அரசியலை உருவாக்க உதவி செய்ய வேண்டும். இதுவே அவர்களது முதற் கடமையாகும்.

★

விஞ்ஞானம்

# இந்தியக் கனிப்பொருள் ஆராய்ச்சி

இந்திய பூகர்ப்ப ஆராய்ச்சிக் கழகத்தை அடிப்படையிலேயே மாற்றியமைப்பதற்கான தொரு திட்டத்தின் விவரம் மத்திய சட்டசபையில் மராமத்து சுரங்க-மின்சார இலாகாக் காரியதரிசி சமர்ப்பித்த ஒரு அறிக்கையில் வெளியிடப்பட்டிருக்கிறது.

கழகத்தின் விஸ்தரிப்புக்காகவும் சீரமைப்புக்காகவும் இதுவரை எடுத்துக் கொள்ளப்பட்டுள்ள நடவடிக்கைகள், கழகத்தின் முற்போக்கு அபிவிருத்தியிலே முதல் கட்டமே யாகுமென்றும், நாட்டின் திட்டமான பொருளாதார அமைப்பிலே விஞ்ஞான ஆராய்ச்சி ஸ்தாபனங்கள் பிறவற்றிற்குச் சமரையாக இக்கழகம் விளங்கும் வகையிலும் அமைந்திருக்கின்றன வென்றும் அறிக்கை கூறுகிறது.

நாட்டின் கனிப்பொருள் மூலங்களை அபிவிருத்தி செய்வதே பூகர்ப்ப ஆராய்ச்சிக் கழகத்தின் முதன்மையான அலுவலாக இருக்க வேண்டுமென்பதை, யுத்த காலத்தில் இக் கழகத்தின் வேலைகளில் ஏற்பட்ட வெற்றி தோல்விகள் மூலம் கிடைத்துள்ள அனுபவம் நன்கு வலியுறுத்துகிறது. இதுகைகூட வேண்டுமானால் பூகர்ப்ப ஆராய்ச்சிக் கழகத்தை வலுவான விஞ்ஞான ரீதியான அடிப்படையில் அமைத்தாகவேண்டும். ஆகையால், இந்திய பூகர்ப்ப ஆராய்ச்சிக் கழகத்தின் எதிர்கால வேலைத் திட்டத்தை வகுக்கையில், பூமி ஆராய்ச்சிப் படகுகள் வரை தலையும், பரிசோதனைச்சாலை ஆராய்ச்சியையுமே ஆதாரமாகக் கொண்டு நடத்தப்படும் அடிப்படையான பூகர்ப்ப ஆராய்ச்சி வேலைகளும், பூமியில் தோண்டிப் பார்த்தல், சுரங்கம் வெட்டுதல், பூமி அமைப்பு ஆராய்ச்சி ஆகியவை போன்ற, கனிப்பொருள் அபிவிருத்தியில் நேரிடையான சம்பந்தங்கொண்ட அலுவல்களும் சரிசமமாக நடைபெறும்படி செய்வது மிக முக்கியமாகுமென உணரப்பட்டது.

ஆகையால், இந்திய பூகர்ப்ப ஆராய்ச்சிக் கழகத்தின் பல்வேறு பிரிவுகளின் அமைப்பிலும் அலுவல்களிலும் மாறுதல்கள் செய்யப்பட்டுள்ளன. இக் கழகத்தில் வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு என படம் வரையும் வட்டங்கள் நான்கும், கனிப்பொருள் அபிவிருத்தி வட்டம் ஒன்றும், பூகர்ப்ப ஆராய்ச்சி எஞ்ஜினியரிங்-பாதாள நீரோட்ட வட்டம் ஒன்றும், அடங்கி இருந்தது. கடைசியாகக் குறிப்பிடப்பட்ட இரண்டு வட்டங்களின் அலுவல்களும் அகில இந்திய வியாபகமானவையாகும். இப்பொழுது, படம்வரையும் வட்டங்கள் ஐந்தாக மாற்றியமைக்கப் பட்டுள்ளன. கனிப்பொருள் அபிவிருத்தி வட்டமும், பூகர்ப்ப ஆராய்ச்சி எஞ்ஜினியரிங்-பாதாள நீரோட்ட வட்டமும், படம் வரையும் வட்டங்களின் அலுவலுடன் நெருங்கிய சம்பந்தங் கொண்ட வேலைப் பகுதியையும் படம் வரையும் வட்டங்கள் இனி மேற்கொள்ளும். கனிப்பொருள் அபிவிருத்திப் பிரிவொன்றும், பூகர்ப்ப ஆராய்ச்சி எஞ்ஜினியரிங்-பாதாள நீரோட்ட நிபுணர் பிரிவொன்றும்மத்தியகாரியாலயத்தில் அமைக்கப் பட்டிருக்கின்றன. பெரிய திட்டங்கள் எல்லாவற்றையும் இந்த நிபுணர் பிரிவு கவனிக்கும். கனிப்பொருள் அபிவிருத்திப் பிரிவு, பூமியில் தோண்டிப் பார்த்தல், சுரங்கங்கள் வெட்டிப் பார்த்தல், பூகர்ப்ப ஆராய்ச்சி ஆகிய அலுவல்களைக் கவனிக்கும். இந்தப் புதிய பிரிவுகள் தங்கள் அலுவல்களைச் செய்கையில் படம் வரையும் வட்டங்களுடன் இணைந்து வேலை செய்யும்.

கனிப்பொருள் ஆராய்ச்சி மாகாணங்களின் பொறுப்பாகையால், இந்த இலாகாவின் வேலையைப் பல இடங்களில் பிரித்துவைத்து நடத்துவதும் இந்தப் புதிய ஏற்பாட்டின் மூலம் சாத்தியமாகிறது.

இவ்விரு பிரிவுகளையும் சீரமைப்பதுடன்கூட, சமீபத்தில் ஆரம்பிக்கப்பட்ட பூமி அமைப்பு ஆராய்ச்சிப் பிரிவைப் பலப்படுத்தவும் உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. பூமி தோண்டிப்பார்க்கும் பகுதி யொன்று தனியாகவும், தளப்பட்டறையொன்றும் அமைக்க ஏற்பாடாகி வருகிறது. பரிசோதனைச் சாலையும் நவீன முறையில் விஸ்தரிக்கப்பட்டு வருகிறது; சிப்பந்திகளின் எண்ணிக்கை அதிகமாக்கப் படுகிறது; ஆராய்ச்சிச்சாலைக்கு வேண்டிய புதிய கருவிகள் வெளி நாடுகளிலிருந்து கொண்டுவரப்படுகின்றன.

இந்தப் புதிய பகுதிகளும் பிரிவுகளும் இரண்டு நோக்கங்களுடன் அமைக்கப்படுகின்றன. வியாபார ரீதியில் பயன்படுத்திக் கொள்வதற்கான மார்க்கங்கள் புலப்படும் வரையில் வெளி ஆராய்ச்சி வேலைகளைத் தொடர்ந்து நடத்திச் செல்வதுடன்கூட, பொதுஜனங்களுக்கு ஆலோசனைகள் கூறுவதும் இவற்றின் நோக்கமாகும்.

பொதுஜனங்களுக்கு அளிக்கப்பட்டுவரும் உதவியை அபிவிருத்தி செய்யும் நோக்கத்துடனேயே கனிப்பொருள் செய்தி ஸ்தாபனம் அமைக்கப்பட்டிருக்கிறது. சரியான முறையில் விளம்பர ஸ்தாபனமொன்றும் ஏற்பாடாகி வருகிறது. இந்திய பூகர்ப்ப ஆராய்ச்சிக் கழகப் பிரசுரங்கள் மீண்டும் வெளிவர ஆரம்பித்துவிட்டன. இந்தியக் கனிப்பொருள்கள் என்ற சஞ்சிகை யொன்றை மூன்று மாதத்துக்கொருதடவை பிரசுரிப்பதற்கான ஏற்பாடுகளும் நடைபெற்று வருகின்றன. இந்திய பூகர்ப்ப ஆராய்ச்சிக் கழகக் காரியாலயத்தில் புஸ்தகசாலைப் பிரிவு ஒன்றும், புள்ளி விவரப் பிரிவு ஒன்றும் புதிதாக அமைந்துள்ளன.

# சமஷ்டி அரசியல்

"அமாத்யன்"

பிரிட்டன், பிரான்சு, ஜெர்மனி, ஜப்பான், இத்தாலி முதலிய தேசங்களில் மத்திய அரசாங்கம் ஒன்றுதான் இருக்கிறது. இவை ஏக அரசாங்கம் என்று கூறப்படுகிறது.

பெடரல் அரசாங்கத்தில் பல மாகாணங்களோ அல்லது பல தனி அரசாங்கங்களோ சேர்க்கப்பட்டு அவறறிற்கு ஒரு மத்திய அரசாங்கம் இருக்கும். மத்திய அரசாங்கம் முக்கியமாக அயல் நாட்டு விவகாரங்களையும், பெடரல் அரசாங்கம் முழுவதின் தற்பாதுகாப்பையும், எல்லா மாகாணங்களின் பொது சீர்திருத்தங்களையும் பொது பொருளாதார நன்மைகளையும் கவனிக்கும். மாகாண அரசாங்கம் அதற்காக ஒதுக்கப்பட்ட விஷயங்களில் முழு அதிகாரத்தை உபயோகிக்கும். அதாவது பெடரேஷன் என்பது சுயேச்சையுடைய பல தனி அரசாங்கங்களின் ஒன்று சேர்க்கை. யுனைட்டட் ஸ்டேட்ஸ், கானடா, ஆஸ்திரேலியா, ஸ்விட்சர்லாந்து, மெக்ஸிகோ இவை பெடரல் அரசாங்கங்கள். தென் ஆப்ரிக்கா பெடரல் அரசாங்கம் என்று சாதாரணமாக கூறப்பட்டபோதிலும் அதில் மாகாண அரசாங்கங்களுக்கு அதிக அதிகாரம் இல்லை. சில மாகாணங்களுக்கு சட்ட சபைகளே இல்லை. 1935ம் வருஷத்து இந்தியா சட்டத்தின்படி இந்திய அரசாங்கம் பெடரல் அரசாங்கம் ஆக முயற்சிக்கப்படுகிறது.

பெடரல் அரசாங்கங்களின் அம்சங்கள் கீழ்வருமாறு:—

(1) பெடரல் அரசாங்கத்தின் அதிகாரமும் மாகாண அரசாங்கங்களின் அதிகாரமும் எவ்வெவ்விஷயங்களில் என்பது வரையறுக்கப்படுதல்.

(2) பெடரல்அரசியல் சட்டம். வேறு சட்டங்கள் யாவற்றையும் விட பலம்பொருந்தியதாயிருத்தல். அதாவது ஒரு விஷயம் மாகாண அரசாங்கத்தின் அதிகாரத்தைச் சேர்ந்ததா அல்லது பெடரல் அரசாங்கத்தின் அதிகாரத்தைச்சேர்ந்ததா என்பதை பெடரல் அரசாங்க சட்டமே முடிவுசெய்யும். மாகாண அரசாங்கங்கள் இயற்றிய சில சட்டங்கள் பெடரல் அரசியல் சட்டத்துக்கு புறம்பானவையாயிருந்தால் அவை செல்லுபடியாகாது.

(3) பெடரல் அரசியல் சட்டத்தை பெடரல் அரசாங்கமோ அல்லது மகாண அரசாங்கமோ தனியாக மாற்றமுடியாது. பொதுவாக இரண்டும் தீர்மானித்தால் தான் மாற்றமுடியும். அத்துடன் சில பெடரேஷனில் பெருவாரியான ஜனங்களின் ஆதரவும் வேண்டும்.

(4) பெடரல் அரசியல் சட்டத்தைப்பற்றி வியாக்யானம் கூறவும் பெடரேஷனைப்பற்றியோ மாகாணங்களைப்பற்றியோ பெடரல் அரசியல் சட்ட சம்பந்தமாக எழும் வழக்குகளை முடிவுசெய்யவும் ஒரு பெடரல் நீதிஸ்தலம் இருக்கும்.

பெடரல் அரசாங்கம் இரண்டு விதமாக ஏற்படலாம்:

(1) தனிப்பட்ட பல அரசாங்கங்கள் முக்கியமாக தங்கள் தற்பாதுகாப்பை பலப்படுத்துவதற்காக ஒன்று சேர்ந்து ஒரு பெடரல் அரசாங்கத்தை ஏற்படுத்தலாம். உதாரணம்: யுனைட்டட் ஸ்டேட்ஸ், ஆஸ்திரேலியா, ஸ்விட்சர்லாந்து.

(2) அதிக பரப்போ அல்லது ஜனத்தொகையோ உள்ள ஒரு பெரிய அரசாங்கம் அதன் ஒவ்வொரு பிரதேசத்தின் நிர்வாகமும் அதிக திறமையாக நடக்கவேண்டும் என்பதற்காக அதை பல மாகாணங்களாக பிரிக்கலாம். உதாரணம் கானடா.

இந்திய அரசாங்கத்தைப் பொறுத்தவரையில் இந்த இரண்டும் கலந்திருக்கிறது. சமஸ்தானங்கள் இந்திய அரசாங்கத்தில் சேர்வது முதல் விதத்தை சேர்ந்தது. மாகாணங்களுக்கு சில விஷயங்களில் சுய ஆட்சியைக் கொடுப்பது இரண்டாவது விதத்தை சேர்ந்தது.

ஒரு பெடரல் அரசாங்கம் அமைக்கப்படுவதற்கும் நீடித்து நடப்பதற்கும் கீழ்க்கண்ட சாதனங்கள் இருக்க வேண்டும்.

1. பெடரல் அரசாங்கத்தில் சேரும் ஆர்வம்: ஒன்றோடொன்று அருகேயுள்ள பல பலஹீனமான சிறு தேசங்கள் தாங்கள் ஒன்று சேர்ந்தால்தான் பலம் பொருந்திய அயல் நாடுகளின் படையெடுப்பிலிருந்து தங்களை பாதுகாக்கலாம் என்று கருதும்போது பெடரேஷன் ஏற்படுத்தும் ஆர்வம் ஏற்படுகிறது. பெடரேஷனில்சேர்வதால் தனி அரசாங்கம் தனது உரிமையிலும் சுயேச்சையிலும் ஒரு பாகத்தை இழக்கிறது. ஆனல் தற்பாதுகாப்பில் அதிக பலம் பெருவதுடன் பெடரேஷனில் சேர்ந்த எல்லா நாடுகளுடனும் தடையில்லாத வியாபார உரிமை அடைவதுடன் பெடரேஷனில் உள்ள நாடுகளுக்கு அயல் நாட்டு வியாபாரத்தில் அதிக சௌகரியம் ஏற்படுத்த சாதனம் உண்டாகிறது.

2. அத்துடன் இச்சிறு நாடுகள் தங்கள் சுதந்திரத்தையும் பாதுகாக்க அவாவுடையனவையாயிருக்கவேண்டும். ஒன்றுசேரும் ஆசை மட்டும் இருந்தால் இச்சிறு நாடுகள் எல்லாம்சேர்ந்து ஒரு ஏக நாடாக ஆகிவிடும். ஆனல் இச்சிறு நாடுகள் தங்கள் எல்லைக்குட்பட்ட விஷயங்களை தாங்களே நிர்வகிக்க ஆசையுடையவையாயிருந்தால் பெடரேஷனுக்கு உள்பட்டு மாகாண அரசாங்கங்களும் இருக்கும்.

3. மேலும் இச்சிறு நாடுகள் பூகோள அமைப்பில் ஒன்றுசேர்க்கப்பட்டவையாயிருக்கவேண்டும். உலகத்தின் பல பாகங்களில் சிதறிக் கிடக்கும் பல நாடுகள் ஒன்று சேர்ந்து ஒரு பெடரல் அரசாங்கத்தை உண்டாக்க ஆர்வம் உடையவையாய் இருக்க முடியாது. உதாரணமாக பிரிட்டிஷ் ஆட்சியில் உள்ள பல தேசங்கள் சேர்ந்து ஒரு பெடரல் அரசாங்கத்தை அமைப்பது அதிக சிரமம்.

4. பெடரேஷனில் சேரும் அரசாங்கங்கள் யாவும் சற்றேறக்குறைய சம பலம் உடையனவாய் இருக்கவேண்டும். இல்லாவிடில் பலம் அதிகம் பொருந்திய நாடு மற்ற நாடுகளின் மீது ஆதிக்கம் செலுத்த முயற்சி செய்யும்.

5. பெடரேஷனில் சேர்ந்த நாடுகளின் குடிகள் கலாசாரத்தில் ஒற்றுமையுடையவராயிருப்பது பெடரேஷனின் இணைப்புக்கு பலத்தை கொடுக்கும்.

6. பெடரேஷனின் நிலைப்புக்கு குடிகள் அரசியல் ஞானம் உடையவராய் பெடரல் அரசாங்கம் மாகாண அரசாங்கம் இரண்டிற்கும் சட்ட பூர்வமான தங்கள் கடமைகளை உணரவேண்டும்.



பிரிட்டிஷ் இளவரசி எலிஸபெத்




# ஆசை வலை

சூகி

வாலுக்கட்டாயமாக, ஆட்டுக்குட்டிகளை கதறக்கதற இழுத்துச் செல்லும்போது அவை பரிதாபமாக அலறும். 'நே' தாத்தாவின், கோபமும் ஆங்காரமும் இருந்த இருப்பைப் பார்த்தால், சிவஞானத்தைக் கழுத்தைப் பிடித்து தள்ளிக்கொண்டுபோன மாதிரி, அவ்வளவு சிடுசிடுப்பாக இருந்தார். பாவம், அவன் மனசிலே கொந்தளித்துக்கொண்டிருந்த காதல்?

அந்தப் பத்தாம் பசலி, அப்பளாக்குடுமி சந்தனப்பொட்டு, என்ன கண்டார். நவநாகரீகத்தின் போக்கால், இளம் உள்ளங்களில் திளைத்தெழுந்த காதல் முளையின் பசுமையை, வழுக்கைத் தலையான, உள்ளமும் உடலும் பட்டுப்போன அந்த கிழம் எங்ஙனம் உணரமுடியும். தாமரையின் சௌந்தர்யத்தை, பொலிவை எங்காவது நடுநிசி உணர முடியுமா? கற்பனை தான் செய்ய முடியுமா? ஆனால், இருள் கவிந்து விடியுமா விடியுமா எனத் தவிக்கும் தாமரை, சூரியனைப் பார்க்க ஏங்குகிறது.

ஆனால் இங்கே சூரியனை அல்லவா, ராகு கேது போல 'நே' தாத்தா விழுங்கிவிட்டார். பாவம் 'தாமரை' (நீலா) ராகுவையும், சூரியனையும் உணராமல் அடுக்களையில் வெங்காயம் அரிந்துகொண்டிருந்தசமயம், நடுத்தெருவில் போய்க்கொண்டிருந்தனர்.

சிவஞானத்தின் மனசிலே, தன்னைப் பிடித்த ராகு சிலமணி நேரத்தில் விட்டுவிடும் என்ற நினைப்பு வரவே, தழையைக் கண்டு பின்னால் போகும் ஆட்டுக்குட்டி போல போனான். தாத்தாவின் நடையில மிடுக்கும், கைத்தடியில் வேகமும் அதிகமாகவே இருந்தது! ஏதோ பழி பாவம் செய்துவிட்ட கொலைக் குற்றவாளியை தூக்கு மேடைக்கு அழைத்துச்செல்வது போல அழைத்துச் சென்றார்.

நடையேறி வீட்டிற்குள் சென்றதும், "அம்மா நெல்லை நெல்லை" என்றார். சிவஞானத்தின் தங்கை வந்தாள் சிவஞானம், சுவரில் ஏதோ நகத்தால் கீறிக்கொண்டு, எதிலும் கவனமற்றவன் போல உட்கார்ந்திருந்தான்.

"உன்னோட அண்ணாச்சி ரோக்யதைக் கேள். இந்தப் பயல். அந்த தேவடி..."

"தாத்தா ஜாக்கிரதை. தங்கள் நாக்கு அழுகிப் போம். வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ என்று பேச வேண்டாம்." என மறுத்தான். அவன் குரலின் வேகம், 'நே' தாத்தாவின் செவிட்டில் அறைவேன் என அறை கூவுவதாகப் பட்டது.

"கோபப் படாதீங்க அண்ணாச்சி. நீங்க ஊருக்குப் புதிசு. தாத்தா என்னத்தையும் சொல்லிவிட்டுப் போகட்டும்."

"சொல்லறதுக்கும் ஒரு எல்லை வேண்டாமா? அங்கே வைத்து சண்டையைக் கிளப்ப வேண்டாமென்றுதான், இங்கே வந்தேன். நான் என்ன சின்னப் பயலா? பி. ஏ. பாஸ் செய்தவன். எனக்கு இவர் புத்தி சொன்னது போதும். என் காரியங்களில் தலையிட

## 11. சிரிப்பெனும் சரவிளக்கு

வேண்டாம்" என எழுந்து மாடிக்கு நகர்ந்தான்.

நெல்லை வடிவு வழி மறித்து ஏதோ சொல்ல வாயெடுத்தாள்.

அதற்குள் சப் இன்ஸ்பெக்டரே, அங்கு வந்தார்.

"ஏது மாப்பிள்ளை. நீலாவை விட்டு இங்கே வந்துவிட்டீர்கள்?"

"நீதானே சொல்லுடா அவள் விருத்தாந்தத்தை. இவன் போய் அங்கே 'டோரா' போட்டுவிடுகிறான்."

நே தாத்தாவை, இன்ஸ்பெக்டரும், நெல்லையும் சமாதானப் படுத்தினர். இன்ஸ்பெக்டர், பெரிய இலக்கிய இலக்கண விற்பன்னர்களுக்கு இருக்கவேண்டிய 'சுருங்கச் சொல்லி விளங்க வைத்தலை'ச் செய்தார்.

தஞ்சாவூர்ப் பக்கம், மனைவியைப் பறிகொடுத்த சர்க்கிள் ஒரு தாஸியின் வலையில் விழுந்தார். நீலாவைப் பெற்று நாலைந்து வருஷத்தில் அவளும் காலமானாள் அந்தப்பெண் நீலாவின்மேல் அதிக பிரியமாக இருக்கிறார். தற்சமயம் உத்யோகம் கோயமுத்தூர் பக்கம் விசேஷ வேலையின் நிமித்தம் திருச்செந்தூர் வந்துள்ளார்.

மழைத்துளிக்காக ஏங்கியிருந்த சகோரப்பட்சியின் வாயில் இடி விழுந்தால் எப்படி இருக்குமோ அப்படி நெஞ்சம் உடைந்தான் சிவஞானம். ஆனால் தவறு நீலாவின்மேல் இல்லையே!

சீர்திருத்தம், சமூக முன்னேற்றம், தியாகம் இதெல்லாம் ஒரே முயற்சியில் செய்து முடிக்க எண்ணினான். அந்தச் சமயம் 'மாப்பிள்ளை—இப்போது விஷயம் புரிந்ததா? இனி கல்யாண ஆசையை விட்டுவிடும். தவிரவும், உமக்கு அந்தப் பெரிய இடம் கிடைக்குமா?' என்றார் இன்ஸ்பெக்டர்.

நே தாத்தா, "டேய். இவனைக் கொக்கிரகுளத்திற்கு அனுப்பிவை. காந்தத்தின் பக்கம் இரும்புத் துண்டை வைத்துவிட்டு, ஆகர்ஷணத்திற்கு உள்ளாகாதே என்று சொல்ல முடியுமா? இவனை ஊருக்கு அனுப்பு" என்றார்.

இன்ஸ்பெக்டர், "ஆமாம் தாத்தா. மாமா அவர்கள் மாப்பிள்ளையை உடனே அனுப்பிவைக்கத் தபால் எழுதியுள்ளார்கள். ஏதோ, வேலை காத்து இருக்கிறதாம். இன்று சாயங்கால வண்டியில் அனுப்பிவைக்கிறேன். ஏன் நெல்லை, நீயும் போகவேண்டுமா?" என்றார்.

நெல்லைக்கு, அந்தத் தாமிரவர்ணித் தண்ணீரில் நாலுநாள் குளித்து எழுந்தால் உடம்பு சரியாகிவிடுமென நினைத்தாள். தாய் வீட்டுக்குப்போக ஆனந்தப் படாத பெண் எவள் இருக்கிறாள்?

சாயங்கால வண்டியில் புறப்படுவதாக புறப்பட்டே ஆகவேண்டுமென்று—'நே' தா[illegible]சொல்லிவிட்டார்.

சிவஞானத்தின் மனசில் சிந்தனைத் தூற்றல் விழுந்தது. உண்மையான செய்திகளாக இருக்குமா? நீலாவை தான் மணப்பதற்காக சொல்லிய கற்பனைக்கதையா? புத்தி கலங்கியது. இன்னும் ஐந்துமணி நேரத்தில், நீலாவை பிரிந்து பாலைவனம் போன்ற பூமிக்குச் செல்லவேண்டுமே!

தன் அறைக்குள் நுழைந்து, நேற்றிரவு இன்பக்கனவு கண்ட அதே படுக்கையில் அமர்ந்தான். கோவில் மாடுகள் வெயிலில் உஷ்ணம் தாங்காமல், வீட்டு நிழலில் அசைபோட்டு படுத்திருந்தன. வெளியில் இருந்த உஷ்ண ஜுவாலையைவிட அவன் உள்ளத்தின் வெப்பம் அதிகமாகயிருந்தது.

கண்ணை மூடி மனக்கண்ணிலே அந்த ஜோதி வெள்ளத்தை, அழகுராணியை நிலைநிறுத்தினான். பகற்கனவை வரவேற்றபோது, அவன் மனக்கண்ணிலே, கவிதைப் பெண்ணாகக் காட்சியளித்தாள்.

செம்பவளச் சிலை கொக்கி
போன்ற இதழில்
சிரிப் பென்னும் சரவிளக்குத்
திகழ வந்தாள்
கும் மிருட்டுக் கூந்தலினைத்
தென்றல் மோத
கொட்டினவே முல்லைமுலர்
விண் மீனைப் போல.

என்ற கவியின் வாக்காக அவன் இன்பக் கடலில் ஆழ்ந்திருந்த சமயம், "சார்" என்ற குரல் கொடுத்தான் ஒரு போலீஸ் சேவகன்.

நிலாவிற்குப்பதில், சேவகனைக் கண்டதும் திடுக்கிட்டான் "சர்க்கிள் இன்ஸ்பெக்டர் வீட்டுச் சின்னம்மா உங்களை வரச் சொன்னார்கள்" என்றான் சேவகன் பயபக்தியோடு. பழம் நழுவி பாலில் விழுந்த கதையாயிற்று. ஊருக்குப் போகுமுன் அவளைச் சந்தித்துவிட்டுப் போகவேண்டும் என்ற ஆசை நிலை பெற்றது.

## 12. இருதுருவங்கள்

"மாமா! நாங்கள் இங்கே வந்திருப்பதாக அப்பாவிற்கு விபரம் தெரியக்கூடாது." என்றான் சுந்தரம்.

அப்பொழுதுதான் வெங்கிடாசலம் வண்டியிலிருந்து இறங்கியவர், "நீங்கள் வந்திருந்த விபரத்தை திண்டுக்கல்லில் வைத்தே அறிந்தேன். உடனே, கொக்கிரகுளத்திற்குத் தந்தி கொடுத்துவிட்டேன், மாப்பிள்ளை" என்றார்.

"அப்படியானால், நாங்கள் இங்கிருந்து வேறு இடம் கிளம்பவேண்டியதுதான். அப்பா முகத்தில் இனி விழிக்க மாட்டேன்."

"ஆமாம். சீக்கிரம் குளித்துவிட்டு, நாம் பாங்கிக்குப் போகவேண்டும். மற்றவை அங்கே போய்ப் பார்த்துக் கொள்ளலாம்.'

இதற்குள் ராஜம் ஓடோடி வந்தாள். அவள் நினைப்பெல்லாம் பெட்டிமேல் இருந்தது. "என் தாத்தா அக்காவோட பெட்டி படுக்கை யெல்லாம் எங்கே! நீயும் கொண்டு வரலையா?" என்றாள். பிள்ளையவர்களுக்குப் புரியவில்லை.

செல்லம் தாங்கள் கோபித்துக் கொண்டு ஓடிவந்ததை மறைக்கவே பொய் சொல்லியிருந்தாள். அதை எங்கே கண்டாள் குழந்தை ராஜம்.

"ராஜம், இவுக ரெண்டுபேரும் ஓடி வந்துட்டா. இங்கேயிருந்து ஓடிப்போகாமல் நீயே பார்க்கணும். ஆமா, மாப்பிள்ளை, நீங்கள் இங்கே யில்லையென உங்கள் அப்பாவிற்குத் தந்தி வந்ததே, அந்தத் தந்தியை யார் கொடுத்தது."

"நான்தான் கொடுத்தேன்."

"எனக்கும் அப்படித்தான் சந்தேகம். போனது போகட்டும்." புதிய துணிமணிகள், கொடியில் தொங்கிக்கொண்டிருந்தன. ஊகித்துக்கொண்டார். எல்லாம் நேற்று கடைவீதியில் வாங்கப் பட்டிருக்கவேண்டும். பணம் ஏது?

செல்லத்தின் கைவளையொன்று விலையான விபரம் அறிந்ததும் அவர் மனசு கஷ்டப்பட்டது, நகைநட்டு நிலபுலம் விற்பது என்றாலே பெரியவர்கள் மனம் கஷ்டப்படுவது உலக இயல்பு. தம் மருமகனுக்கு பாங்கியில் உத்யோகம் தேடிவைக்க முயற்சி செய்து, வரும் வழியிலேயே அதுபற்றியும் விசாரித்து வந்திருந்தார். அனுகூலம் ஏற்படும் என்று நம்பினார்.

பாங்கிக்குள் வேலை பார்க்க நுழைந்த சுந்தரத்திற்கு நெஞ்சம் 'திக்' கென்றது. பாங்கியில் உள்ள அவ்வளவு பணமும் தனக்கு வந்துவிட்டால்? வரும் என்று ஏதோ குருட்டு நம்பிக்கை. மனிதன் எண்ணத்தால் ஆளப்படுகிறான் என்கிறார்களே, அதுபடி சுந்தரம் தன் கனவு பலிதமாகும் என்றுநிச்சயமாகநம்பினான். பாங்கியில், கட்டுக் கட்டாக ஆயிரம், ஐயாயிரம் ரூபாய் நோட்டுக்கள். புஸ்தகங் கடையிலாவது புஸ்தகங்களை அடுக்கி வைத்திருப்பார்கள. பாங்கியில், நோட்டுக்கட்டுகள் ரயில் பிரயாணிபோல ஒன்றன்மேல் ஒன்றாகக் கிடந்தன.

நோட்டுக்களை எடுக்கும்போதே கை நடுங்கும். எங்கு தவறு வந்துவிடுமோ என்று பயம். வெங்கிடாசலம் பிள்ளை அந்த பாங்கியிலேயே பணம் போட்டிருந்தாராதலால், 'டிபாஸிட்'ஆக அதைக் கட்டிவிட்டார். மனம்போல பறந்து திரியும் பறவையைக் கூட்டுக்குள் அடைத்த கதையாக, அடிக்கடி அவன் மனம் 'செல்லம் என்ன செய்துகொண்டிருப்பாள்?' எனக் கேட்கும். நாளை முதல் அதேயிடத்தில் பணங்களை எண்ணுவதும் எழுதுவதும் தொழில் என்றதை நினைத்த மனது சற்று கஷ்டப்பட்டது. உடனே, தான் மாமனார் வீட்டில் உழைத்துச் சாப்பிடுவதை எண்ணியபோது, உத்யோகத்தைக்கெட்டியாகப்பற்றிக்கொள்ள எண்ணினான்.

(11-ம் பக்கம் பார்க்க)

எண்ணக்கருக்கள்.

# அகமும் புறமும்

"ஹர்ஷன்"

சமீபத்தில் ஒரு நண்பர் என்னிடம் தனது சிநேகிதரான பெரிய அதிகாரி ஒருவரைப்பற்றிப் பெருமையாகச் சொல்லிக்கொண்டார். "காரியாலயத்தில் அவர் சிங்கமாக இருப்பார். வீட்டிற்கு வந்து விட்டால்—ஏன், வெளியில் வந்து விட்டாலே போதும்—அவர் ஆட்டுக்குட்டியாகப் போய்விடுவார்" என்பதுதான் அவர் பெருமையாகச் சொல்லிக்கொண்ட விஷயம்.

இந்த 'சிங்கமும்—ஆட்டுக் குட்டியும்' நம்மிடையே நிலவிவரும் மனோ நிலையை அப்பட்டமாகச் சித்தரிக்கின்றன. ஆகா! எத்தனை சிங்கங்களும்—ஆட்டுக் குட்டிகளும் ஒரே துறையில் தண்ணீர் குடிக்கின்றன! இது ஒரு ஆச்சரியமான சேர்க்கை! கடுமையான பாஷையில் பிரீதியுள்ளவர்கள் இதை "த்விபாவம்" என்று கூறுவார்கள்.

திரு அகோரப்பா கள்ள மார்க்கெட்டுக்காரர். அவர் கள்ள மார்க்கெட்டுகளின் மூலம் சேர்த்த பணம் முப்பத்து மூன்று கோடி ரூபாய். அதில் ஒரு பைசாகூட அவர் தமக்காக உபயோகப்படுத்திக்கொள்ளவில்லை. வைத்திய சாலை, நாடக அரங்கம், பெரியோர் ஞாபகார்த்த நிதி, சர்வகலாசாலை என்று விநியோகம் செய்து விட்டார்!

திரு அகோரப்பாவைப் பற்றி நமக்கு பகிரங்கமாகத் தெரியும். அவரை இரண்டு துண்டங்களாக வெட்டி நாம் ஆராய்ச்சி செய்கிறோம். கள்ள மார்க்கெட் அகோரப்பாவை நாம் கண்டிக்கிறோம். கொடைவள்ளல் அகோரப்பாவை நாம் ஆதரிக்கிறோம். ஆகா! என்ன நேர்மை, நீதி!

ஒரு வேடிக்கையான கதை சொல்வதுண்டு. ஒரு பணக்காரக் கருமியின் வீட்டுக்கு ஒரு பிச்சைக்காரன் வந்து பிச்சை கேட்டான். ஆனால் அந்தக் கருமி பிச்சை போடாமல், இன்னொரு வீட்டைக் காட்டிப் பிச்சை வாங்கிப்போகும்படி கையால் சைகை காட்டினான். அவன் இறந்த பிறகு யமலோகம் போனான். அங்கே யமதர்மராஜன் அவனது கைக்கு சந்தனம் பூசிப் பூஜை செய்தானாம். ஆனால் அவனது உடம்பின் மற்ற பாகங்களுக்குக் கசையடி கொடுத்தானாம்!

திருமங்கையாழ்வாரும், அகோரப்பாவும் நமது மதிப்பில் சம அந்தஸ்து உடையவராயிருக்கிறார்கள். சில சமயங்களில் நமது உணர்ச்சிப் பெருக்கில் இருவரும் கலப்பற்ற பாராட்டுதலுக்காளாகிறார்கள். கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனுக்கு யுத்த களத்தில் போதனை செய்தபோது கூட அவனை மனிதனாக இருக்காதே, அரசனாக இரு என்று தானே வற்புறுத்தினர்!

தேசியத்துக்குக் குந்தகமில்லாத சர்வதேசியம், முதலாளிகளுக்குக் குந்தகமில்லாத தொழிலாளிகள் என்றெல்லாம் நம்முடைய கற்பனையில்பலர் வாசம்செய்து வருகிறார்களல்லவா.

மனிதனைத் தனி நபரென்றும் சமூகத்தில் ஒருவன் என்றும் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கிறோம். தேசத்துக்காக சொந்த நலன்களைத் தியாகம் செய்ய வேண்டுமென்று கோருகிறோம். இவ்விதமான தியாகத்தைப் பாராட்டுகிறோம்.

நல்ல லட்சியமாயிருந்தால் வழி தவறாக இருந்தாலும் பரவாயில்லை யென்று நினைக்கிறோம். நேச தேசங்கள் வெற்றி பெறுவதற்காக அணுகுண்டைத் தயார்செய்து பிரயோகிப்பது இந்த அடிப்படையில் அனுமதிச்சீட்டு பெற்றிருக்கிறது.

நமது பெரிய காங்கிரஸ் காரர்களில் அநேகர் மேல்நாட்டுப் போதைச் சரக்குகளில் ஈடுபட்டவர்கள். இவர்கள் செய்யும் மதுவிலக்குப் பிரசாரம் நம்மை மயக்கி நல்லவர்களாக்கப் பார்க்கிறது. "சொல்லுவதுபோல் செய்—செய்வதுபோல் செய்யாதே" என்ற வாய்ப்பாடு இவர்களுக்கு சாதகமானது.

கலையும், வாழ்க்கையும்-வேதாந்தமும், வாழ்க்கையும் என்ற பொருள்கள் நம்மைமிகவும் கவர்ந்திருக்கின்றன. ஒன்றை மற்றதிலிருந்து பிரித்து வெளுத்து வாங்குகிறோம். நிர்வாணமான பதுமையை சிருஷ்டித்த கலைஞனைப் பாராட்டிப் பூஜை செய்கிறோம். ஆனால் நிர்வாணமான மனிதர்களை சமூக விரோதிகள் என்று கண்டனம்செய்கிறோம். இலக்கியத்திலும் கலையிலும் உருவாகும் புரட்சிக் காதலர்களை (திருட்டுக் காதலர்களை) நமது ரஸனை வரவேற்று வாழ்த்துகிறது. ஆனால் வாழ்க்கையில இம்மாதிரி நடப்பது அராஜகமாக பாவிக்கப்படுகிறது.

ஃ ஃ ஃ

மனித வாழ்க்கையை மாத்திரம் எடுத்துக்கொண்டு பார்க்கும் போது ஒரே அராஜகமாகவும், குழப்பமாகவும், ரீதியின்றியும் இருப்பது தெளிவுபடுகிறது. "எதற்காகப் பிறந்தோம்?" என்ற கேள்விகள் அர்த்தமற்றவை என்று தோன்றுகின்றன. "எதற்காகவும் பிறக்கவில்லை. ஏதோ பிறந்து விட்டோம்" என்ற சித்தாந்தம் ஊர்ஜிதப் படுகிறது. ஆகவே "உயர்ந்த வாழ்வு" என்பது வெறும் கொட்டைப்பாக்காகத்தான் போகிறது.

ஆனால் அகண்டாகாரமான வெளிக்குப் பறந்துசெல்வோம். சூரியனும், சந்திரனும் இயங்குவதும், நட்சத்திரங்கள் தோன்றி மறைவதும் ஒரு ரீதியாக இருப்பது தென்படுகிறது. பாண்டு வாத்தியத்துடன் நடைபோடும் பட்டாளத்தானைப்போல் ஏதோ ஒரு இசைக்கொப்ப வாழ்க்கை நடத்த முடியுமோ என்ற சந்தேகம் தோன்றும். கான்பூஷியசின்

(9-ம் பக்கம் பார்க்க.)

சிவாஜி

அறவலி காத்து நாளும் அன்னையின் பணிக்கேன்றே நம்
உறையிலே உறங்கும் வீரம் உருவினோம் ஓங்கிவிட்டோம்.

திருச்சி. விய-ஹூ தை-மீ 27-உ 9—2—47

## சென்னை மந்திரிசபை

நமது சென்னை மாகாண மந்திரிசபை எந்தக் கணத்தில் கவிழுமோ, எந்தக்கணத்தில்மாறுமோ, எப்படி மாறுமோ என்றெல்லாம் சந்தேகங்களைக் கிளப்பும் நெருக்கடியான நிலைமை நிலவிவருவதாகத் தெரியவருகிறது. இத்தலையங்கம் எழுதும்போது இந்த நெருக்கடி, நெருக்கடியாகத்தான் இருக்கிறது. பத்திரிகை வெளிவரும்போது நிலைமை தெளிவுபட்டுவிடலாம். அல்லது தெளிவுபடாமலேயே நீடிக்கலாம். ஒன்றுமில்லாமல் புகைந்துபோகலாம்.

மந்திரிசபையை விஸ்தரிப்பதா, கொஞ்சம் மாற்றி அமைப்பதா, முழுவதுமே மாற்றியமைப்பதா என்ற பிரச்னைகள் நமது மாகாண காங்கிரஸ் கட்சிப் போக்குகளின், பிரிவுகளின் சுயநல அடிப்படையில் எழுந்த பிரச்னையாக இருக்கலாம். ஆனல் பொதுஜனம் அதை வேறு கோணத்திலிருந்துதான் பார்க்க முடியும்.

யார் ஆட்சிசெய்கிறார்கள் என்பதைப்பற்றி அவனுக்குக் கவலையில்லை. ஆட்சி எப்படி இருக்கிறது என்பதுதான் அவனது ஒரே கவலை. இந்த மாற்றுக்களினலோ, திருத்தங்களினலோ ஏதாவது நலன் ஏற்படுமா என்பது அவனது ஒரே கேள்வி. திருத்தியமைப்பதனல் மாகாண அரசியலும், பொருளாதாரமும் சீர்திருந்துமென்றல் பொதுஜனம் அதை வரவேற்கிறன்.

இந்த திடீர் நெருக்கடிகளை நினைத்துப்பார்க்கும்போது ஒரு கசப்பான உண்மை நமக்குப்புலப்படுகிறது. பொதுமக்களுக்கும் அரசாங்கத்துக்கும் நெருங்கிய தொடர்பு இன்னும் ஏற்படவில்லை என்பதே அந்த உண்மை. அரசாங்கத்தின் எண்ணம் எப்படி இருக்கிறது, அதன் நடவடிக்கைகள் என்னென்னஎன்பதை பலன்களிலிருந்தோ அல்லது ஆரம்பத்திலிருந்தோ தெரிந்துகொள்ளமுடியவில்லை. அரசாங்கம் என்று ஒன்று இருக்கவேண்டும், அங்கே யாரோ இருக்கிறார்கள் என்பதுதான் பொதுஜனத்துக்குத் தெரிகிறது.

ரொம்ப காலமாக விடுதலைப் போராட்டம் நடத்திவந்தும் பொதுஜனத்துக்குப் போதுமான பொது அறிவு, அரசியல் அறிவு ஏற்படும்படி செய்யப்படவில்லை. ஆகவே அரசியலில் கட்சிகளும் கட்சித் தலைவர்களும் சண்டை போடுவதும், சமரசம் பேசுவதும் பொதுஜனத்திடமிருந்து பிரிவுபட்ட விஷயமாகத் தோன்றுகின்றன.

இதைப்பற்றி இப்போது யோசனைசெய்து பயனில்லை. ஆனல் ஒரு பெரிய பொறுப்பு இருப்பதைமாத்திரம் சம்பந்தப்பட்ட கட்சிகளும், அரசாங்கங்களும் உணரவேண்டும். தங்களது செயல் எதுவும் பொதுஜனத்தை எப்படி பாதிக்கும் என்பதையே முதலில் சிந்திக்கவேண்டும்.

எனவே மந்திரிசபையில் மாறுதல் ஏற்பட்டால் அது ஜாக்கிரதையாகவும், நிர்வாகத்துக்குக் குந்தகம் விளைக்காத முறையிலும், மக்களின் வாழ்க்கை நிலையை சீர்திருத்தும் வகையிலும் இருக்கவேண்டும். தற்போதிருக்கும் மந்திரிசபையின் நிர்வாகத் திறமையை உயர்த்த வேண்டிய உடனடியான அவசியம் இருக்கிறது என்பதும் மனதில் கொள்ளவேண்டிய விஷயம்தான்.

## ஸ்டர்லிங் கடன்கள்

இந்தியாவுக்கு பிரிட்டன் கொடுக்கவேண்டிய கடன் பல கோடிக்கணக்கிலிருக்கிறது என்பது நேயர்களுக்குப் பொதுவாகத் தெரியும். இவற்றை ஸ்டர்லிங் கடன்கள் என்று கூறுகிறோம். இவை பத்திரங்களாக நம் கையில் இருக்கின்றன. பணம் எப்போது திரும்பிவரும் என்பதே நமது கவலை.

இது விஷயமாகப் பேச்சுவார்த்தை நடத்துவதற்காக லண்டனிலிருந்து ஒரு தூதுகோஷ்டி இந்தியாவுக்கு வந்து, சென்ற மூன்றும் தேதியிலிருந்து புதுடில்லியில் ஆலோசனைகள்செய்துவருகிறது. ஸ்டர்லிங் கடன் கொடுக்க வேண்டிய பிரிட்டனிலிருந்து, கடன் கொடுக்கப்படவேண்டிய இந்தியாவுக்கு தூதுகோஷ்டி எதற்காக வரும்? கொஞ்சம் தள்ளிக்கொடுக்கவேண்டும் என்று கேட்கத்தான்.

கடன் கொடுத்திருக்கும் இந்தியா மோசமான பொருளாதார நெருக்கடியில் அவதிப்பட்டுவருகிறது. இதற்கு பிரிட்டிஷ் ஆட்சியே பிரதான காரணம் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். மகாயுத்தகாலத்தில் உழைப்பின் மூலமும், பணமாகவும், பொருளாகவும் பிரிட்டனுக்கு இந்தியா உபகாரம் செய்ததாலேதான் இந்தச் சேமிப்பு ஏற்பட்டிருக்கிறது.

பிரிட்டன் இந்தியாவைவிடப் பன்மடங்கு பொருளாதார சௌகரியம் கொண்டிருக்கும் நாடு. உண்மையில் அமெரிக்காவுக்கு அடுத்தபடி பொருளாதார பலமுள்ள நாடு பிரிட்டனே. சமீபகாலமாக அதன் ஏற்றுமதிப் பெருக்கமும், வேற்றுநாடுகளிலிருந்து அது பெற்ற உதவியும் இதை நிரூபிக்கும்.

இந்த நிலையில் கொடுக்கவேண்டிய கடனில் கொஞ்சம் தள்ள வேண்டும் என்று கோருவதும், இப்படித்தள்ளுவது சலுகையல்ல, நியாயம் என்று வாதாடுவதும் நீதிக்கு அடுக்காது. இந்திய அரசாங்கம் சிறிதும் விட்டுக்கொடுக்கக்கூடாது. நமது பொருளாதாரம் கரையேற மிகுதியிருக்கும் கடைசி வைக்கோல் இந்த ஸ்டர்லிங் கடன்கள்தான்.

# கண்ணோட்டம்

ரா. நா

சென்னை காங்கிரஸ் மந்திரிசபை "நித்யகண்டம் பூர்ண ஆயுஸ்" என்று வாழ்ந்துவருகிறது. சென்ற நான்கு நாட்களாக "மந்திரிசபை நெருக்கடி" சம்பந்தமாக வெளியான வதந்திகளுக்கு கணக்கில்லை. இன்றோடு சமாப்தி என்றனர் சிலர். "பிரகாசம் காரு கிண்டன். அதெல்லாம் நடக்கிற காரியமா" என்றனர் மந்திரிசபை பக்தர்கள். "பாஷ்யம், லட்சுமிபதி இருவருக்கும் செலவுகொடுத்து, ராஜாஜி கட்சியினரிலிருந்து இரு மந்திரிகள் நியமனமாகப்போகிறது" என்றனர் வேறு சிலர். "ஸார், சுப்பராயன்தான் பிரதம மந்திரி தெரியுமோல்லியோ" என்றார் ஒரு "விஷயம் தெரிந்த வட்டாரம்". "தமிழ் மந்திரிகள் யாவருக்கும் கல்தா வாம் தெரியுமா?" என்று கேட்டார் எல்லாம் தெரிந்ததாக மமதைகொண்ட பேர்வழி. "ஸார், ஓமாந்தூர் ராமசாமி ரெட்டியார் கட்சித் தலைவர். இனி பிரதம மந்திரி யார் என்பது திட்டமாக வேண்டும்" என்று சாதித்தார் ஒரு மதியூகி. ஆனல் பிரகாசம் மந்திரிசபை இந்த நிமிஷம் வரையில் அசையாமல் ஆடாமல் இருந்துவருகிறது. நாளை சமாசாரத்தைப்பற்றி இன்று கவலைப்பட்டுப் பிரயோசனமில்லை.

ஃ ஃ ஃ

சென்ற மாதம் 20ம்தேதி அரசியல் நிர்ணயசபைக் கூட்டம் முடிந்து தென்னிந்திய அங்கத்தினர்கள் திரும்பி வந்தவுடன சில வதந்திகளும் அவர்களுடன் வந்தன. தம் சிஷ்யர்கள் யாவரும் பிரகாசம் மந்திரிசபையை கவிழ்ப்பதற்கு ராஜாஜி அனுமதியளித்துவிட்டார் என்று கூறினர் தமிழநாடு காங்கிரஸ் தலைவர் பரிவாரத்தைச் சேர்ந்த ஒருவர். ராஜாஜி கோஷ்டி பிரமுகர் ஒருவரைச் சந்தித்துக் கேட்டதில் "அப்படி ஒன்றும் ராஜாஜி சொல்லவில்லை. நீங்கள் கூடி மாகாண நலனுக்கேற்ப எதுசெய்தாலும் எனக்குச் சம்மதம்தான் என்று ராஜாஜி கூறினர்" என பதிலளித்தார் அவர். ராஜாஜி கோஷ்டியினரும்கூடி ஆலோசித்னர். கேவலம் அதிகாரத்தைக் கைப்பற்றும் முயற்சிக்குத் தாங்கள் ஆதரவளிக்கலாகாதென்றும், நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேறினல் மாற்று மந்திரிசபையை மத்திய காரிய கமிட்டியே நியமிப்பது எனும் ஏற்பாட்டிற்கு பிறகோஷ்டிகள் சம்மதித்தால் அவர்களோடு ஒத்துழைக்கலாம் என்று முடிவு செய்ததாகத் தெரிகிறது. இந்த ஏற்பாடு ராஜாஜி கோஷ்டியைச்சோராத தமிழ் அங்கத்தினர்களுக்குப் பிடித்தமாயில்லை என்றும் தெரிகிறது.

ஃ ஃ ஃ

இந்த நிலையில் கட்சிக்கூட்டம் கூடியது. முதல்நாள் மதுவிலக்கு விஷயம் விவாதத்திற்கெடுத்துக்கொள்ளப்பட்டது. பெரும்பாலான மெம்பர்கள் பூரா மதுவிலக்கை ஆதரித்தனர். இந்த பிரச்னையில் மந்திரிசபையைத் தோற்கடிக்கலாமா என்று யோசிக்கையில் "கட்சிமுன்உள்ளது 8 ஜில்லாக்களில்மதுவிலக்கா, 6 ஜில்லாக்களில்மட்டும் விஸ்தரிப்பா என்பதுதான்" என்று கூறி ஓட்டெடுத்து பிரதமர் நிலைமையை சமாளித்தார்.

அப்புறம் அவசரச்சட்ட விவாதம் வந்தது. அதை எதிர்த்துப் பேசிய ஸ்ரீ வைத்தியநாதய்யருக்கு பெரும்பான்மை ஆதரவு இருந்தது. அன்று பிரதமர் கூட்டத்தை ஒத்திவைத்தார். கமயூனிஸ்ட்கள் சம்பந்தமாக காங்கிரஸ் அனுஷ்டிக்கப்போகும் கொள்கைபற்றி மத்திய சர்க்காரிலிருந்துவந்த சுற்றறிக்கை வந்தது. அதனல் நிலைமை மாறிப்போனதுமன்றி பிரகாசம்காருவும் ஆட்சேபகாமான சில பகுதிகளை நீக்குவதாக வாக்களித்தார். அதன் பேரில் ஸ்ரீ வைத்தியநாதய்யர் தம் தீர்மானத்தை வாபஸ் பெற்றார்.

ஃ ஃ ஃ

அடுத்தபடியாக சென்னை சர்க்காரின் ஆலைக்கொள்கையை ஆட்சேபித்து மந்திரி சபையை மடக்கலாம் என்கிற எண்ணமும் ஈடேறவில்லை. சென்னை சர்க்காரின் கதர் திட்டத்தையும், ஆலை விஸ்தரிப்பு தடை திட்டத்தையும் மகாத்மா ஆதரித்து எழுதிய கடிதங்களை பிரகாசம்காரு படித்ததாகவும், அதன்பேரில் எதிாப்புஉத்தேசமுள்ள சிலரும் சும்மாயிருந்துவிட்டார்கள் என்றும் கூறப்படுகிறது. இனி மந்திரி சபையைக் கவிழ்ப்பதாயிருந்தால் நேரடியாக நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவர வேண்டும். தமிழர்கள் யாவரும் ஒன்று சேர்ந்து ஆந்திரர்களில் 40 பேராவது சேர்ந்தால்தான் தீர்மானம் வெற்றிபெற முடியும். ஆனல் நிஷ்கர்ஷையான எதிர்கால திட்டத்தை ஏற்படுத்திக் கொள்ளாமல் வெறும் பதவி பரிவர்த்தன அடிப்படையில் காரியம் செய்தால் ஒன்றும் கைகூடாது.

மந்திரிகள், பார்லிமெண்டரி காரியதரிசிகள் மனோபாவத்திலும் நடத்தையிலும் திருப்திகாமான மாறுதலை மேலே பிரஸ்தாபித்த நிலைமை ஏற்படுத்தியிருக்கிறது என்று ஒரு சட்டசபை அங்கத்தினர் என்னிடம் கூறினர். முன்னெல்லாம் பார்த்தாலும் பார்க்காதது போல் சென்றுகொண்டிருந்த இந்த அதிகாரிகள் இப்பொழுது சட்டசபை மெம்பர்களை வலுவில் சந்தித்து பேசி உபசரிக்கின்றனராம். "உங்களுக்கு ஏதாவது காரியம் ஆகவேண்டுமா" என்று கேட்டு உடனே அதை முடித்தும் தருகிறார்களாம். பிரதம மந்திரியும் தம்மை ஆதரிக்காத கோஷ்டித் தலைவர்களைக் கூப்பிட்டுப் பேசுகிறாராம். இம்மாதிரி சரஸ சுபாவத்தால் எதிர்ப்பு மனோபாவம் தேய்ந்துகொண்டு வருகிறது என்று அந்த நண்பர் கருதுகிறார்.

பொதுமக்களைப் பொருத்தமட்டில் சதியும், சூழ்ச்சியும் ஒழிந்து, நிம்மதியாக மாகாணநலனுக்காக உருவான காரியங்கள் செய்ய காங்கிரஸ்காரர் யாவரும் ஒருமித்து வேலை செய்வதையே பெரிதும் விரும்புகிறார்கள்.

# பக்க வெட்டு

சட்டசபைக் கூட்டத்திலும், கட்சிக் கூட்டத்திலும் சென்னை மாகாண பொதுஜன பந்தோபஸ்து உத்திரவின் பயங்கரமான, மோசமான பகுதிகள் பெரும் தாக்குதலுக்குள்ளாகிக் கடைசியாக அந்தப் பகுதிகளை நீக்கிவிட்டுத் தேவையானபடி மாற்றி அமைத்து சட்டமாக்குவதற்கு முயற்சிக்கப்படும் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. இது வரவேற்கத் தக்க நல்ல முடிவாகும். சட்டமாகும் போது தீவிர ஆலோசனையும், பொது ஜனத்துக்கு பந்தோபஸ்தும் செய்யப்படவேண்டும். லட்சிய சட்டத்தின் அடிப்படையே, "நூறு குற்றவாளிகள் தப்பித்துக் கொண்டாலும் ஒரு நல்ல மனிதன் தவறாகத் தண்டனை யடையக் கூடாது" என்பதே—இது எந்தக் கணத்திலும் மறக்கப்படக்கூடாது.

கம்யூனிஸ்டுகளின் பலாத்காரம் பொதுவான அராஜகத்தைக்கிளப்பி பயங்கரமான நிலைமையை உண்டாக்கி வருகிறது என்பதே இந்த அவசர உத்திரவுக்கு அவசியம் உண்டாக்கிற்று என பிரகாசம் காரு சாங்கோபாங்கமான பிரசங்கத்தின் மூலம் சட்டசபைக் கூட்டத்தில் தெளிவுபடுத்தினர். பிரகாசம் காருவின் பிரசங்கத்தைப் படித்தவர்களும், கேட்டவர்களும் உண்மையில் அவரது எண்ணத்துக்கு அனுதாபம் காட்டியிருப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. அவரது லட்சியம் பெரிதளவு நியாயமானது தான் என்பதில் ஐயமில்லை.

ஆனால் முறையைப் பற்றித்தான் நியாயமான எதிர்ப்பு இருந்திருக்கிறது. மகாயுத்தம் நடந்த காலத்தில்—அதுவும் ருஷியா யுத்தத்தில் சேர்ந்தபின்னர்தான்—கம்யூனிஸ்டுகள் வேலை நிறுத்தங்களையும், பலாத்காரங்களையும் கண்டித்து "உற்பத்தியைப் பெருக்கு" என்ற கோஷத்துடன் உலவி வந்தார்கள். ஆனால் அவர்களே இன்று—போர்க் காலத்தைவிட மோசமான பொருளாதார நெருக்கடி நிலவும் இன்று—உற்பத்திக்கு பங்கம் விளைவிப்பதிலும், தொழிலாளர்களை பலாத்காரத்தில் ஈடுபடுத்துவதிலும் முனைந்திருக்கிறார்கள்.

பொதுமக்கள், தொழிலாளர்களின் வாழ்க்கைத் தரமும், பொருளாதார நிலையும் மிகவும் கேவலமாக இருக்கின்றன. கள்ளமார்க்கெட்டும், லஞ்சப் பேயும், பணக்காரர்களின் பேயாட்டமும் கோரமாக இருக்கின்றன. இவற்றை ஒழிப்பதில் கம்யூனிஸ்டுகள் முனைந்திருப்பதும், இந்தத் துறையில் துணிவுடன் ஆக்க வேலை செய்வதும் பாராட்டத் தக்கவைதான்.

ஆனால் இன்று நிலவும் பொருளாதார நெருக்கடியைப் பயன்படுத்திக் கொண்டு அரசாங்கத்துக்குத் தொந்தரவு கொடுப்பது, பலாத்காரத்தில் மற்றவர்களை ஈடுபடுத்துவதன் மூலம் அரசியல் லட்சியக்களை நிறைவேற்றிக் கொள்ளப் பார்ப்பது என்பவை கடுமையான கண்டனத்துக்கு உகந்தவையே.

வேலைநிறுத்தங்களினால் தொழிலாளருக்கோ, பொது ஜனத்துக்கோ நஷ்டமே தவிர லாபமில்லை. உற்பத்திக்கு முட்டுக்கட்டை போடுவதன் மூலம் பொருளாதார நிலை இன்னும் சீர் கேடடையுமே தவிர திருந்த முடியாது.

திறமையின்மையாலோ, அக்கறையின்மையாலோ, அவசியமான சீர்திருத்தங்களை உடனடியாக உருவாக்குவதற்கு தைரியமின்மையாலோ ஒரு அரசாங்கம் காலதாமதம் செய்துகொண்டு போவதனால் தனது இருக்கைக்கே அர்ஹதையை இழந்துவிடுகிறது.

கம்யூனிஸ்டுகளின் பலாத்காரச் செயல்களுக்கு முடிவுகட்டவேண்டும் என்பதற்காக வெறும் பந்தோபஸ்து சட்டங்கள் மாத்திரம் செய்வதில் யாதொரு பிரயோசனமுமில்லை. தவிரவும் எந்தக் கட்சியும் பொதுஜன ஆதரவின்றி வேலை செய்யமுடியாது. பொதுஜன ஆதரவு, முழுவதும் தவறான லட்சியங்களையுடைய கட்சிக்குநீடித்து இருக்கமுடியாது.

ஆகவே தொழிலாளர்களுக்கு உடனடியாகப் பரிகாரம் செய்வதன்மூலமும், பொருளாதார நெருக்கடிக்கு உருப்படியான சீர்திருத்தங்களால் தளர்த்துவதன் மூலமும்தான் தொழிலாளரின் மேலும், மக்களின்மேலும் தவறான வழிகளையுடைய கட்சிகளின் செல்வாக்கையும், குறும்பையும் அகற்றமுடியும். வேலைநிறுத்தம் செய்யும் தொழிலாளர்களும், சம்பளம் போதவில்லை, ஓய்வு போதவில்லை என்று கூறுவோரும், அகவிலைக் கஷ்டத்தை எடுத்துக்காட்டி வருந்துவோரும் கம்யூனிஸ்டுகளுக்காக அப்படிச் செய்யவில்லை. ஆனால் கம்யூனிஸ்டுகள் இந்த மோசமான நிலைமையை நீக்குவதற்காகப் போராடுகிறார்கள் என்பதனாலும், தங்கள் கஷ்டம் நீங்க வேண்டுமென்ற கவலையாலும்தான் அந்தக் கட்சியின் சில தவறான போதனைகளில்கூட ஈடுபட்டுவிடுகிறார்கள். இந்தத் தவறிலிருந்து அவர்களைக் காப்பாற்றுவதற்கு அரசாங்கம் ஆக்கவேலையின்மூலம் முனையவேண்டும்.

"நான் கம்யூனிஸ்டுகளின் விரோதி" என்று பல அரைகுறை வாதிகள் மார்தட்டிக்கொண்டு அதையே நாட்டின் இன்றைய அரசியல் நிலையில் செல்வாக்குச் சீட்டாக உபயோகப்படுத்திவருகிறார்கள். ஒருவருக்கும் ஒருவரும் விரோதியல்ல. பொதுஜனத்துக்கு நலன்செய்யவேண்டும், அதற்கு உருப்படியான வேலை எது என்பது ஒன்றில்தான் நமது அரசியல் வாதிகளும், அரசாங்கங்களும மனம் செலுத்தவேண்டும். உருப்படியான சீர்திருத்தம் ஏற்பட்டால் குறும்புசெய்யும் கட்சிகள் அடக்குமுறைச் சட்டங்களின்றியே அழிந்துவிடுமே! மக்களிடையே அவற்றிற்கு ஆதரவு இருக்காதல்லவா? —"ஸ்ரீரா"



(7-ம் பக்கத் தொடர்ச்சி.)

'இசை ஆட்சியும்" மகாத்மாவின் 'ராம ராஜ்யமும் சாதனைக்கு முழுவதும் புறம்பானவையல்ல என்று எண்ணமிடுகிறோம்.

சீர்திருத்தம் என்று நினைத்தாலோ மனிதவர்க்கத்தின் ஆரம்ப காலத்திற்குச் சென்று நமது தீமைகளின் காரணங்களைத் தேட வேண்டியிருக்கிறது. ஆகவே நீதி, ஒழுங்கு வேண்டுபவர்கள் அழித்தல், ஆக்கல் என்ற இரண்டு சக்திகளையும் படைத்திருக்கவேண்டும்.

மனித வர்க்கத்தையே பூண்டோடு அழித்துவிட்டுப் புது சிருஷ்டி செய்து விஞ்ஞான ரீதியில் இசை ஒழுங்கில் ஆட்டிப்பார்க்க வேண்டுமென்று இச்சை பிறக்கத்தான் செய்கிறது.

ஆனால் இந்த அகண்டகார மண்டலத்தின் (cosmos) இயக்கமே அதற்கும் பெரிய பின்னணியில் ஏன் ஒரே குழப்பமாக இருக்கக்கூடாது என்ற கேள்வி கடைசியாகப் பிறக்கிறது. எண்ணத்திற்கு முடிவேற்படுகிறது. பங்கீடுச் சீட்டை எடுத்துக்கொண்டு பங்கீட்டுக்கடைக்குச் சென்று முன்னால் சாமான்வாங்க முண்டுகிறோம். பஸ் நிறுத்தத்தில் போலீஸ்காரன் இல்லாமல் "க்யூ" வரிசைக்கு மதிப்புக் கொடுப்பதில்லை.



## "ராம விலாஸ்" திறப்புவிழா

திருச்சி பிரபல கல்ச்சர் வைர வியாபாரியான M. ராமசாமி செட்டியார் அவர்களின் புதிய வியாபாரஸ்தலமான "ராம விலாஸ்" திறப்பு விழா சென்ற ஞாயிறன்று நடைபெற்றது. நகரின் பிரபல ஸ்தர்களும் வியாபாரிகளும் விஜயம் செய்தனர்

## ஸமாஜத்திற்கு ஸ்வாமிகள் விஜயம்

ஸ்ரீரங்கம் ஸ்ரீ ஸாயி ஸமாஜத்திற்கு தென்னாட்டில் பாபாவின் பெருமையை பரவச்செய்த தனிப்பெரும் பக்தரான ஸ்ரீ நரஸிம்மஸ்வாமிகள் சென்ற பௌர்ணமியன்று விஜயம்செய்தார். அன்றைய விழா, ஸ்ரீ ஸாயி ஸாரதா கேப் நிர்வாகியின் உபயமாக நடந்தது.

6-வது "மின்னல்"
சென்னையிலிருந்து முற்றிலும் புதிய முறையில்
15—2—47-ல் வெளிவரும்.

# செய்திகள்

★

## குரு பூஜை

திருவாவடுதுறை ஆதினத்தின் ஸ்தாபகர்களான ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளின் வருஷாந்த்ர குரு—பூஜை மகோற்சவம், திருவாவடுதுறையில் 10 தினங்கள் விசேஷ பூஜை, சங்கீதம், நாதஸ்வரங்களுடன் நடைபெற்றது. பட்டினப் பிரவேசத்தின்போது ஸ்ரீ பி. எஸ். வீருசாமி, டி. என். ஆர். நடராஜசுந்தரம் (கக்காயி) திருவீழிமலை சகோதரர்கள், செம்பொன்னார் கோயில் சகோதரர்கள் முதலியவர்கள் நாதஸ்வரம் வாசித்தனர்.

## ஸ்ரீ கக்காயி நாதசுவரம்

திருவாவடுதுறை ஸ்ரீ டி. என். ஆர். நடராஜசுந்தரம் (கக்காயி) 9—2—47 அன்று மதுராந்தகத்திற்கு அருகிலுள்ள அருங்குணத்தில் நாதசுவர கச்சேரி செய்வார்.

## கோவை ஷண்முக பவன சங்கீத வித்யாலயம்.

ஷை வித்யாலயத்தின் 3-வது ஆண்டு விழா 31—1 47 அன்று தொடங்கி ஐந்து தினங்கள் சிறப்பாக நடைபெற்றதாம். தினமும் மாணவ, மாணவிகளின் சங்கீதக்கச்சேரியும், பரொபஸர் சாம்பமூர்த்தி முதலிய அறிஞர்களின் பிரசங்கமும் நடைபெற்றதாம்

## அயர்லாந்தில் தேநீர்

ஐரிஷ் ஜனங்களை யுத்தம் எவ்வளவு மாறுபடுத்தினதென்று நமக்கு தெரிகிறதில்லை. அவர்கள் நிறைய தேநீர் அருந்துபவர்கள். அவர்களுடைய யுத்தத்திற்கு முந்தின செலவு வருஷத்துக்கு பதினோராயிரம் மில்லியன் கோப்பை தேநீர் என்று தெரிகிறது. யுத்த காலத்தில் அநேகமாக வாரத்துக்கு அரை அவுன்ஸ் தேயிலைதான் கிடைத்து வந்தது. தேநீர் கிடையாமல் பல குடும்பங்கள் தவித்தன. இப்பொழுது கிடைக்கும் வாரத்துக்கு $1\frac{1}{2}$ அவுன்ஸ் தேயிலையும் அவர்களுக்கு போராததுதான். இதின் பலன் என்னவென்றால் தேயிலை மிக அதிக விலைக்கு விற்கப்படுகிறது.

## கோவை எழுத்தாளர் கூட்டம்.

கோவை ஜில்லா எழுத்தாளர் சங்கத்தின் சாதாரணக் கூட்டம் ஒன்று 26—1—47 புதுமலர் நிலயத்தில் நடந்தது. சங்கத் தலைவர் கே. சீனிவாசன் தலைமை வகித்தார். ஆரம்பத்தில் சங்க நடவடிக்கைபற்றி 'சாரதி' கூறினார். பின்பு காரியதரிசி கே. சி. எஸ். அருணாசலம் சங்கத்தின் பொருளாதார நிலையை உயர்த்தவேண்டுமென்றும், மற்ற மொழிகளிலுள்ள இலக்கியச் சுவையையும் நாம் அனுபவிக்க வசதிகள் வேண்டுமென்றும் அதற்குச் சங்கத்தை பலப்படுத்தவேண்டுமென்றும் கூறினர்.

இசை, நாட்டியக் கச்சேரிகள் சங்கச் சார்பில் நடத்துவதென முடிவு செய்யப்பட்டது. தலைவர் சீனிவாசன் பொருளாதாரத் திட்டத்திற்குக் கமிட்டிகள் அமைப்பதுபற்றியும், சங்க நடைமுறை நிகழ்ச்சிபற்றியும் பேசினர்.

## 'சோனாலு'க்கு பரிசு

மதுரையில் நடைபெற்ற தமிழ்நாட்டு வைத்திய நிபுணர்கள் மகாநாட்டில், மதுரை பாரத் ட்ரக் ஹவுஸாரின் 'சோனாலை'ப் பாராட்டி ஒரு தங்கப் பதக்கம பரிசளிக்கப்பட்டது.



# கோர்ட் விளம்பரங்கள்.

## திருச்சி சப் ஜட்ஜ் கோர்ட்.

### S. C. 253/46

திருச்சிக் கோட்டை நடு கள்ளுக்கார தெருவிலிருக்கும், வை. கந்தசாமி செட்டியார் மகன் T. K. சிங்காரவேலு செட்டியார் —வாதி.

தஞ்சாவூர் ஜில்லா பட்டுக்கோட்டை தாலூகா, கந்தர்வகோட்டையிலிருக்கும் பூ. வ. வைத்திலிங்கம் செட்டியார் மகன் பூ. வ. வை. கணபதி செட்டியார்.

—பிரதிவாதி.

ஷை வாதி தனக்கு பிரதிவாதி 4-12-43ல் ரூபாய் 365க்கு எழுதிக் கொடுத்திருக்கும் புரோ நோட்டுப்படி தாவா தொடர்ந்து 18—2—47ல் வாயிதா போட்டிருப்பதால், அன்று கோர்ட்டில் ஆஜராகி ஆக்ஷேபணை தெரிவித்துக் கொள்ளலாம்.

திருச்சி 5-2-47 } S. ராமச்சந்திரய்யர், வாதி வக்கீல்.

## திருச்சி டி. மு. கோர்ட்

### S. C. No. 1236/46

தி. தா. பாலக்கரை ராமசாமி தீக்ஷதர் குமாரர் R. N. சாமி —வாதி.

குளித்தலை தாலூகா மணப்பாறை K. A. வெங்கட்டராமய்யர் குமாரர் K. V. சங்கரநாராயணய்யர்—1. ஷை யிடம், ஷையார் குமாரர் K. S வெங்கட்டராமய்யர்—2 —பிரதிவாதிகள்.

ஷை பிரதிவாதிகளுக்கு நோட்டீசு ஷை பிரதிவாதிகளால் அந்தோணி பீட்டருக்கு எழுதிக்கொடுத்திருந்த பிராமிசரி நோட்டை வாதி மேற்படியவர் பெற்று ஷை புரோ நோட்டுப்படி ரூ. 236ம் வாதிக்கு கிடைக்கவேண்டியதற்காக இந்த நம்பரில் தாவா செய்து ஷை நம்பர் 20—2—47உக்கு விசாரணைக்கு போடப்பட்டிருக்கிறது. பிரதிவாதிகள் ஷை தேதியில் ஷை கோர்ட்டில் முற்பகல் 10 மணிக்கு ஆஜராகி அவர்களின் ஆக்ஷேபனைகளை தெரிவித்துக்கொள்ளலாம்.

R. வெங்கட்டராமய்யர், வாதி வக்கீல்.

## துறையூர் டி. மு. கோர்ட்

### O. S. 38/42

திருமலை முத்திரியன் —வாதி.

மூக்க முத்திரியன் —பிரதிவாதி.

ஷை நம்பர் பிரதிவாதி பேரில் வாதி ஈட்டுப்பத்திரப்படி ரூ 100ம் தாவா செலவும் பின் வட்டியுடன் கிடைக்க தாவா செய்து ஸம்மனை ஒட்டி சர்வு செய்ய 17—2—47உ கெடு ஏற்பட்டிருப்பதால் ஷை தேதியில் ஆஜராகி ஆக்ஷேபணையை தெரிவித்துக்கொள்ள கோரப்படுகிறது.

துறையூர் 4--2--47 } V. S. நரசிம்மய்யர், வக்கீல்.

## துறையூர் டி. மு. கோர்ட்

### S. C. 312/46

பெரியண்ண கவுண்டன் —வாதி.

1. ஒலவன் முத்திரியன், 2. ராமசாமி முத்திரியன் —பிரதிவாதிகள்.

புரோ நோட்டுப்படி ரூ. 156—9—0க்கு வாதி பிரதிவாதிகள் பேரில் தாவா செய்து 22—2—47உ கெடு ஏற்பட்டிருக்கிறது.

துறையூர் 1--2--47 } R. T. Varadaraja Iyengar, Pleader.

## அரியலூர் டி. மு. கோர்ட்

### S. C. No, 598 46

உ. தா. தாதம்பேட்டை பழூர் P. மாணிக்கம் செட்டியார் —வாதி.

உ. தா. அண்ணங்காரம்பேட்டை அதயா. கோவிந்த படையாச்சி மகன் பொன்னுசாமி படையாச்சி—பிரதிவாதி.

ஷை நம்பரில வாதிக்கு பிரதிவாதியால் புரோ நோட்டுப்படி சேரவேண்டிய தொகை ரூ. 118-12-0க்கு தாவா செய்து 14—2—47 ஈரங்கி வைக்கப் பட்டிருக்கிறது ஆக்ஷேபணையை ஷை உயில் ஷை கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலும் ஆஜராகத் தவறினால் தீர்ப்புசெய்யப்படுமென்பதை இதன் மூலம் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

N. ஸ்ரீநிவாஸ அய்யங்கார், Pleader.

## துறையூர் டி. மு. கோர்ட்

### O. S. 41/41 and 142/41

சீலா முத்துராசா —வாதி.

பூவா முத்துராசா —பிரதிவாதி.

ஷை வாதி ஷை பிரதிவாதி பேரில் பிராமிசரி நோட்டுப்படி ரூ. 370க்கு O. S. 41/41 நிலும் ஈட்டுப் பத்திரப்படி ரூ. 700க்கு O. S. 142/41 நி.லும் தாவா செய்து ஷை தாவாக்கள் 18—2—47உ ஈரங்கி போடப்பட்டிருப்பதை இதன் மூலம் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

துறையூர் 29-1-47. } T. V. ராஜகோபாலய்யர், அட்வகேட்.

## அரியலூர் டி. மு. கோர்ட்

### O. S. 410/46 I. A. 53/47

சோலைமுத்து மூப்பனார் —வாதி.

கோவிந்த மூப்பனார் வகையரு —பிரதிவாதிகள்.

ஷை நம்பர் 2-ம் பிரதிவாதி விஜயத்தம்மாளுக்கு ஷை நி.ல் 3ம் பிரதிவாதியால் வாதிக்கு எழுதிக் கொடுத்திருக்கும் போக்ய நிலங்கள் சுவாதீனமாக தாவா செய்து சம்மன் சார்வு ஆகாததால் ஒட்டி சார்வு செய்ய மறு உத்திரவாகி ஈரங்கி 17—2—47உ வைக்கப் பட்டிருக்கிறது. ஷைஉல் ஆஜராகி உமக்குள்ள கட்சியை தெரிவித்துக் கொள்ளவேண்டியது.

R. Ramachandra Aiyer, Vakil for Plaintiff.

# ஆசைவலை (தொடர்ச்சி)

மாலை மணி ஆறு அடிக்கும்போது பாங்கு மூடினார்கள். அவன் கையில் இருபதினாயிரம் ரூபாய்கள் வந்து போயின. அவன் வீட்டிற்குவரும் போது, ஒருரூபா இரண்டணுவிற்கு சொந்தக்காரனாக வந்து சேர்ந்தான் அதாவது முப்பது நாட்களுக்குப் பின்னால் $33\frac{3}{4}$ ரூபாய் சம்பளம் கிடைக்கலாம்!

செல்லம், அன்று வெகு மகிழ்ச்சியோடு, சுந்தரம் வருகிறானென்று அடிக்கடி பார்த்து அலுத்துப் போனசமயம் ராஜம் வந்தாள் பேச்சுத்துணை கிடைத்தது. ராஜத்தின் கையில் ஒரு டேப்பம், ஒருமுழ கதம்பமும் இருந்தது.

"தலை பின்னு அக்கா"

ராஜத்தின் கூந்தல் நுரையில் படா வண்ணம் ரு ஸ்டூலில் இருத்தி, நின்றபடியே தலை பின்ன ஆரம்பித்தாள் செல்லம். கன்னங்கரேல் என மேகம்போல் நீண்டு தொங்கிய கேசத்தை நன்கு சிக்கெடுத்து அதை வாரிக்கொண்டிருந்தாள்.

பக்கத்திலே கம்மென்று கதம்பம் மணத்துக்கொண்டிருந்தது.

"அத்தான் எங்கே அக்கா?"

"வேலைக்குப் போயிருக்கிறார்கள். இப்போது வருகிற நேரம்."

"அப்போ வேலைக்காகத்தான், இங்கே வந்தயா அக்கா,"

"ஆமாம்."

"மாத்தல் ஆனால் இந்த ஊரைவிட்டுப் போய்விடுவாயா அக்கா."

"ஆகாது, தங்கக்கட்டி. தோட்டத்திலே தாத்தா நிக்கிறா. நீ போய் கனகாம்பரப்பூ பறிச்சிட்டுவா. முள்ளு கையிலே குத்திடாமே." என்று ராஜத்திற்கு நெற்றியைத் துடைத்தாள் முந்தானையாலே. எண்ணெய் படிந்த நெற்றி பளபளத்தது! ஒரு சாந்துப்பொட்டு மிட்டு, பட்டும் படாமலும் பவுடரை ஒற்றி, தோட்டத்திற்குப் போகச்சொன்னாள். ராஜம் ஒரு குதியில்,—அவளுக்குத்தான் நடக்கத் தெரியாதே!—தோட்டத்திற்குள் ஓடினாள். செல்லம், அடுக்களையில்ப் புகுந்து காப்பிக்கு பாலைக் கொதிக்கவிட்டாள்.

'காமலதா' என்று குரல் கொடுத்தான் சுந்தரம். அக்குரலிலே பிரிவின் தாபம் தொனித்தது. பெண்கள் எதிலும் ஜாக்கிரதை கொண்டவர்கள். எட்டிப் பார்த்தபடியே தோட்டத்திலே அப்பா நிற்கிறார்கள் எனக் கண்காட்டினாள். போதையில் இருப்பவன் எப்படிப் புரிந்துகொள்ளுவான். அப்படியே வந்து ஆலிங்கனம் செய்தான். அது பருவத்தின் சேட்டை.

"அக்கா, பூ கொண்டுவந்திட்டேன்."

"ராஜாக்கிளியா?"

ராஜத்திற்கு முகம் சிவந்தது. அது விளையாட்டுத்தனத்திற்கான கோபம். "என் மூக்கு சிவப்பாகவா இருக்கு எனக்கு?" என்று கேட்டாள் ராஜம்.

சுந்தரம் சிரித்தான். செல்லம் சிரித்தாள்; குழந்தையும் கோபத்தை மாற்றி புன்னகை பூத்தது.

"உன் மூக்கு வெள்ளையாக இருக்கிறது" என்ற குரல் கேட்கவே எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். வெங்கிடாசலம் பிள்ளை, தோட்டத்து வேலையை முடித்துவிட்டு வந்துகொண்டிருந்தார்.

"போ தாத்தா" என்று 'வவ்வவ்வே' செய்தது ராஜம். கழுதைக்கு மூக்கு வெளுப்பாக இருக்குமென்று தாத்தா பேத்தியைக் கேலி செய்தார். மூக்கில் அதிகமாக ஒட்டிக்கொண்டிருந்த பவுடரை, செல்லம் துடைத்து பறித்துவந்த கனகாம்பரத்தை ஜடையில் செருகி, பின்னலுக்கு மேலே, கொத்தாக கதம்பத்தை மடித்துவைத்தாள்.

"பெண்ணுக்குச் சிங்காரம் ஆகிவிட்டது. இதோ மாப்பிள்ளை நான் சிங்காரித்துக் கொண்டுவருகிறேன்." என்று வம்புக்கிழுத்தார். வயதானவர்கள் பேத்திப் பெண்களைக் கண்டால், கேலியாகப் பேசுவது இயல்பு.

ராஜம் முகத்தைச் சுளித்துக் கோணினாள். அப்போதுதான் விழுந்திருந்த இரு பற்கள் இல்லாத வாயைக் கண்ட வெங்கிடாசலம், "அவளுக்கு இரண்டு பல் இல்லை; எனக்கோ பத்துப் பன்னிரண்டு பல் இல்லையே, ராஜம் மாவையே நான் கட்டிக் கொள்ளுவேன்." என்று கேலி செய்தார். கிளி கூண்டைவிட்டுபறந்தோடுவதைப்போல 'விர்' றென்று ராஜம் ஓடியேவிட்டாள்.

பால் முறுகி வரும வாசனை வரவே, சுந்தரத்திற்கு காப்பியின் நினைவு எழுந்தது. மருமகனிடம் வேலை எப்படியிருக்கிறது என்று சம்பிரதாயத்திற்குப் பேச்சுக்கொடுத்தார்.

"எந்தநிமிஷமும் 'திக்திக' என்கிறது. வயலில் நாற்றுக்களை அலட்சியமாகப் பிடுங்கிக் கட்டுக்கட்டுவது போன்று பிறர் செய்கிறார்கள். எனக்கு நோட்டுகளைக் கண்டாலே, விரல் தந்தி அடிக்கிறது!"

"பழகப் பழக சரியாகப் போகும்."

"தந்தி யடிப்பதா, அப்பா" என்று சிரித்தாள் செல்லம்.

"தந்தியும் தபாலும் இருக்கட்டும். சீக்கிரம் கொண்டுவா, காப்பி. நான் போகவேண்டும்."

"இல்லை, மாமா. ஏதோ நாடகமாம். அதில் என்னை நடிக்கக் கூப்பிட்டார்கள். அமெச்சூர் நாடகம்."

"சரி சரி. சீக்கிரம் வந்துவிடுங்கள்." என்றார்.

காப்பி வந்தது. தகப்பனார் முன்னால் செல்லம் எப்படிப் பேச்சை ஆரம்பிக்கிறது என்று தயக்கம் கொண்டாள். நாடகம் என்றாலே அவளுக்குப் பிடிக்காது; அதென்னமோ நடிப்புக்கலைக்கு அர்ப்பணம் செய்கிறவர்கள் வாழ்க்கை மட்டமானது என்று நினைத்தாள். மேலும், தன் சிநேகிதியின் புருஷன் ஒருவன் நாடகத் தொழிலில் புகுந்து கெட்டுப்போனது அவள் நினைப்பில் மின்னலிட்டது.

"என்ன நாடகம்?"

"ஏதோ சமூக நாடகமாம். எனக்கோ நடித்துப் பழக்கம். என் சகோதரத் தொழிலாளி ஸ்டேஜ் பழக்கம் உண்டா என்றார். எனக்கோ ரொம்ப பழக்கம். அதைத்தான் செய்தால் என்ன?"

"நாடகம் நடித்து நமக்கு ஆகப்போவது என்ன?"

"சாப்பிட்டால் என்ன ஆகிறது."

"பசி தணிகிறது."

"நடித்தால் மனம் சந்தோஷமடைகிறது. மேலும் இதில் அமெச்சூர் நடிகர்கள்தானே.'

"யார், நடிகர்களா?"

"நடிகைகள் கிடையாது. அப்பப்பா, இந்தப் பெண்களுக்குத்தான் என்ன பொறாமை."

"நடிகையோ நடிகனோ. எனக்கு நாடகம் என்றாலே வெறுப்பு."

"அதைப்பற்றி எனக்கென்ன? சீக்கிரம் காப்பி கொண்டு வா." என்றான். சுந்தரத்தின் பிடிவாதம் செல்லம் அறிவாள அன்று அதற்குமேல் பேச்சு வேண்டாமென நினைத்து, "சீக்கிரம் வந்துவிடுங்கள்.' என்று காப்பியைக் கொண்டுவந்தாள்.

சுந்தரம் வெளியே புறப்பட்டபோது, "எத்தனை மணியாகும்?" என்றாள். தனக்கு அந்த ஜோஸ்யம் தெரியாதென்றும், ஒத்திகை பார்த்துவிட்டு வருவதாகவும் சொன்னான். அவன் மனசிலே, வருங்காலத்தில் தனக்கு நடிப்பில் உன்னத ஸ்தானம் உண்டென்ற மனக்கோட்டைகள். ஆனால், அவள் மனசிலே அதற்கெதிரிடையான சிந்தனைத் தளங்கள். நேர்மாறான அபிபபிராயங்கள் இரு உள்ளத்திலும் முளைவிட்டன.

அவர்கள் வாழ்க்கை நாடகத்திற்கு அன்று முதலே ஒரு திரை விழத் தொடங்கிற்று.



துளசி ஜலந்தரில்
நடராஜ் சகுந்தலா

ண்ணச் சிற்பம்

# "விடுதலை"

"மாயா"

நகருக்குப் புறம்பே—ஜன நடமாட்டமில்லாத-பரந்த வெண் மணற்பரப்பு. அங்கு சில கற் பாறைகள். உருவிலும் தோற்றத்திலும் ஒன்றுக்கொன்று முரண்பட்டுக் கிடந்தன.

அன்று வானம் இருண்டது; இடி இடித்தது; "சோ" வென்று மழை பெய்தது. சற்று நேரத்தில் வானம் மழை அடங்கி, நிர்மலமாகப் பிரகாசித்தது. அந்தப் பாறைகள் அப்படியே கிடந்தன. அவைகள் கண்ட எவ்வளவோ வருடங்கள் கால வெள்ளத்துடன் ஐக்கியமாகி விட்டன.

அந்த, சென்று கடந்த வருடங்களில் வெளியுலகம் எவ்வளவோ மாறுதல் பெற்றிருந்தது. பழையன யாவும் கழிந்து புத்தப் புதியன புகுந்திருந்தன. பாறைகளின் வாழ்க்கையில் மலர்ச்சியையே காணோம். கேவலம், இடம் விட்டுக் கூடப் பெயரவில்லை!

பாறைக் குழுவினிலே ஒரு சின்னஞ் சிறிய பாறை. இளமையின் வீர்யம் அதன் உடலில் துடிதுடித்து நின்றது. கொஞ்ச நாளாக அதன் உள்ளம் தன் கூட்டத்தாரின் சீர்திருத்தத்தை விரும்பியது.

ஆனல் அதன்பேச்சு எடுக்குமா? "பார்ப்போமே" என்று துணிவு கொண்டு பேசிற்று மற்றவைகளை விளித்து.

"அதோ பாருங்கள்! அந்தப் பறவையை; அது சற்று நேரமாவது ஒரே நிலையில் இருக்கிறதா? கணத்திற்குக் கணம் பறந்தும், தரையினூடே நடந்தும், பின் மறுபடியும், சிறுமையும் துன்பமும் நிறைந்த பூமியை வெறுத்து எழுந்து உயரப் பறந்தும் வாழ்கிறது. நாமோ அன்று கண்ட மேனிக்கு அழிவின்றி புளித்துப் போன வாழ்வுகொண்டிருக்கிறோம். நாமும் உலகத்தின் மற்ற பொருள்களைப் போல் ஏன் ஒளிபெற்ற வாழ்வு கொள்ளக்கூடாது" என்று சொல்லி நிறுத்தியது.

"தகுமடா சிறியாய்நின்சொல்!" என்ற குரல் கேட்டது! ஒரு நரை திரை கண்ட கிழப் பாறையிடமிருந்து ஏகத்தாளத்துடன்.

மாறி வரும் உலகப்போக்கில் அன்று இளம் பாறையின் வாசகத்திற்குப் பெரும் ஆதரவு இருந்தது. கிழப்பாறையின் எதிர்ப்பு, மற்றவை தங்கள் வருங்காலம் குறித்துப் பலவித கனவு கண்டு கூத்தாடிய அமளியில் அடங்கியது.

அவை யாவும் தங்கள் புதுவாழ்வுக்குத்தயார் பெற்றன. புது வாழ்வின் உதய வெள்ளியை எதிர் நோக்கி யிருந்தன.

காலமும் வந்தது. எங்கும் நிறைந்த ஆண்டவனை ஓரிடத்திலே சிறைப்படுத்த எண்ணினன் அந்தப் பிரதேசத்தின் அரசன். கோயிலொன்றை நிர்மாணிக்க ஏவினன். சிற்பியர் பலர் கல்லுளிகொண்டு கடுகிப்போந்தனர் பாறையிடங்களை நோக்கி.

இச்செய்தி பரவவும் பாறைகள் தாங்கள் புது மெருகு கொள்ளப் போவதைப்பற்றியே நாள் முழுதும் பேசத்தொடங்கின. ஆனல் ஜீவன் கொடுக்கக்கூடிய சிற்பி ஒருவனுவது வரக்காணேம் அவைகளை நாடி. இதற்குள் அவைகள் திட்டம் போட்டன; எப்படித் தாங்கள் உருவம் பெறலாம் என்று!

"நான் அந்தக் கோவிலில் ஆயிரமாயிர மாந்தர்கள் வழிபடும் தெய்வத்தின் சிலையாக உருமாறப்போகிறேன்" என்று எல்லோரையும் முந்திக்கொண்டது ஒரு பாறை.

"கடைந்தெடுத்த கலசம்போலாகி, பொன்முடி பூண்டு, வானத்தையளாவி நிற்கப்போகும் கோபுரத்தின் கும்பமாகி, அருணனின் ஒளிக் கதிர்களாலும், சந்திரனின் தண்கிரணங்களாலும் அழகு செய்யப்பட்டு, பலரும் மேலே காண உயர்ந்த நிலையில் இருக்கப் போகிறேன்" என்று பெருமிதமாகப் பேசியது ஒரு பாறை.

"உலகத்தின் அழகு யாவும் ஒருங்கே திரண்டு விளங்குவது பெண்மை வடிவந்தான்; என்னை அந்த சிற்பியிடம் சொல்லி, சாமுத்திரிகா லக்ஷணம்பொருந்திய, தெய்வக்களி துலங்கும், ஒரு மங்கை வடிகாகச்செய்துகொண்டு, கோயிலின் முன் பிரகாரத்தில் நின்றவண்ணம் யாவருடைய கவனத்தையும் கவர்ந்து "கல்லும் சொல்லாதோ கவி" என்ற வாசகத்திற்கு அத்தாட்சியாக விளங்கப் போகிறேன்" என்றுதன் குட்டிப் பிரசங்கத்தை முடித்தது மற்ருெரு பாறை.

இப்படியாக ஒவ்வொன்றும், கும்பத்திலிருந்து கோபுரம் வரை தங்களிடங்களை நிர்ணயம் செய்து கொண்டன.

"ஆனல்......கோயில் கீழிருந்தல்லவா கட்டத் தொடங்குவார்கள்; அதற்கு அடித்தலத்திற்குப் பாறைகள் வேண்டியிருக்குமே?"......இக்குரல் அனுபவம் முதிர்ந்த ஒரு பாறையிடமிருந்து வந்தது.

இத்தனைநேரம் தாங்கள் கட்டிய மனக்கோட்டைகள் அந்தக் கேள்வியினல் துகள் துகளாகச் சிதறியதை அப்பொழுதுதான் உணர்ந்தன பாறைகள். ஆனல ஒருவராவது முன் வரவில்லை தன்னை அடித்தலமாக உபயோகிக்க அனுமதி கொடுக்க; ஒவ்வொன்றும் மற்றதைப் பார்த்து "நீ இரு" என்று ஏலம் போட்டது.

"பெரியவனைப் அன்று பேச வந்தாயே, நீதான் அஸ்திவாரமாக இருந்துபாரேன்" என்றது இளம் பாறையை நோக்கி முன்பு எதிர்த்து நின்ற கிழப்பாறை.

"நான் உங்களுக்காக என் நலத்தையே தியாகம் செய்யத் தயார். ஆனல் என்னைப் பொருக்கமாட்டார்களே; உம்மைப்போல் உரமும் வலிவும் கொண்ட வைரம் பாய்ந்த பாறை வேண்டுமென்பார்களே" என்றது இளம் பாறை.

"தப்பித்துக்கொள்ள ஏய்க்கிருன்!" என்று கூக்குரல்கள் கிளம்பின.

அவைகளுள் பலத்த வாக்குவாதம் நடந்தது. பிரச்னை தீரவே இல்லை. யாவும் தான் கொண்ட பிடியை விடுவதாகக் காணேம்.

"நான் நிலத்திற்கு அடியில் போய் விடுவேன். பின் உலகத்தைப் பார்த்துக் களிப்பதெப்படி? நான் உங்கள் ஜோலிக்கே வரவில்லை; எப்பொழுதும் போல் இப்பரந்த மணல்வெளி இருக்கவே இருக்கிறது எனக்கு" என்றது சலித்துப்போய் ஒரு பாறை

"போகிறவனும் வருகிறவனும் கால்களால் மிதித்துக்கொண்டு போவான். அதைத் தாங்கிக் கொண்டு என்னல் படிகளாகக்கூட இருக்க முடியாது; எனக்கு, நான் முன்பு எண்ணமிட்டு முடிவு கட்டிய நிலைதான் வேண்டும்" என்று கண்டித்துச் சொல்லி விட்டது பிறிதொரு பாறை.

இப்படியாக வாதப் பிரதிவாதங்கள். நம்பிக்கையான முடிவுக்கு வாராததால் அவைகள் பழைய நிலையே-மணல் வெளியில் கிடப்பதே-மேல்என்று எண்ணமிட்டன. தொலைவிலிருந்த காரணத்தால் அரசனின் சிற்பிகள் இவைகளை நாடி வராமலே தங்கள் வினையைத் தொடங்கி முடித்தனர்.

பகலும் இரவும் தவருது மாறி மாறி வந்தன. உலகத்தின் பொருள்கள் யாவும் காலச்சக்கர சுழற்சிக் கேற்ப அவ்வப்பொழுது மாறுதல் பெற்றன. ஆனல்...... பாறைகள்? பாவம்! அப்படியே கிடந்தன.

அன்று மழை விடாமல் பெய்தது; இடி ஓயாமல் இடித்தது; மின்னல் மின்னி மின்னி மறைந்தது. காற்று சுழன்று சுழன்று அடித்தது. அதோ, அந்த இளம் பாறை, மலர்ச்சி வேண்டி தன் வாய்க்குள் முணு முணுக்கும் "விடுதலை, விடுதலை" என்ற ஈனக் குரல் மழையின் பேரிரைச்சலையும் தாண்டி யார் காதுகளில் விழப் போகிறது? பாவம்!

---

## ஹரிஜனங்களை ஆரூர் காண்பதில் அரும்பணி புரிந்த அன்பர்



கே. டி. ஆர்.
கோபால கிருஷ்ண ராஜா

---

## அகதிகளுக்கு

பர்மிய யுத்த நஷ்ட ஈட்டுக் கமிஷன் காரியாலயம் ரங்கூனில் பாயரே தெருவில் உள்ள ராண்டோ்யா கட்டிடத்தில் திறக்கப்பட்டிருப்பதாக பர்மிய அரசாங்கம் அறிவிக்கிறது. ஜனவரி 2-ம் தேதி முதல் நஷ்ட ஈட்டு மனு 'பாரம்'கள் இலவசமாக விநியோகிக்கப்படுகின்றன. இவை இந்தியாவில் பர்மா அரசாங்கம், நம்பர் 12, டல்ஹௌசி சதுக்கம், கிழக்கு, கல்கத்தா என்ற விலாசத்தில் கிடைக்கும்.

## விஷ்ணுபுரப் பள்ளி வளர்ச்சிக்கு சங்கீத வித்வான்கள் உதவி

தஞ்சை ஜில்லாவிலுள்ள விஷ்ணுபுரத்தில் ஓர் உயர்தரப் பாடசாலை நடைபெற்று வருகிறது. அதன் வளர்ச்சிக்காக நிதி உதவ பிரபல சங்கீத வித்வான்கள் கச்சேரி செய்வதாக வாக்களித்துள்ளார்களாம்.

---




### கோவையில்

டி. கே. எஸ். சகோதரர்களின் 'பில்ஹணன்' மூவாயிரம் அடி வரையில் சுடப்பட்டு விட்டதாம். அவற்றை திரையில் போட்டுப் பார்த்தார்களாம். நகைச்சுவை நடிகர்களான ராமசாமியும் சிவதாணுவும் ரஸிகர்களின் பாராட்டுதலுக்கு பெரிதும் பாத்திரமாகப் போகிறார்களாம், பில்கஹணன் மூலமாக என்கிறது சென்ட்ரல் ஸ்டுடியோ குருவி. இருக்கும் மேடையில் தோன்றிய இவர்கள் திறண் திரையில் மறையுமா என்ன?

ஜுபிடர் பிக்சர்ஸாரின் அடுத்த தயாரிப்பான விப்ரநாராயணவில், நாகையா நடிக்க ஏற்பாடாகியிருக்கிறதாம். இவரது தியாகையாவை பார்த்த ரஸிகர், நாகையா இந்த பாத்திரத்திற்கு பொருத்தமானவரென்றுதான் நினைப்பார்கள். அத்துடன் ராஜகுமாரி வேறு இதில் காக்ஷியளிப்பாராம். படம் பிரமாதமாகவே இருக்கலாம்.

முன்பு சித்ரகலாவில் தயாரான முதல் சிங்கள படம் இலங்கையில் திரையிடப்பட்டு அமோக வரவேற்பை பெற்று வருவதாக இலங்கை பத்திரிகை யொன்று கூறுகிறது. அடுத்து வெளியிடுவதற்காக துரிதமான வேலைகள் நடைபெறுகிறதாம், அசோகமாலாவிற்காக. பிரபல சிங்கள நடிகர்கள் இதில் தோன்றுகிறார்களாம்

கோவை 'பக்ஷிராஜா' விலும் இப்பொழுதெல்லாம் 'பிஸி' யாக வேலைகள் நடைபெறுகின்றதாம்.

இவர்கள் சொந்தத் தயாரிப்பான 'கன்னிகா' வளர்ந்து வருகிறாள் தினந் தினமும். ஆர்யமாலா சரோஜினியுடன் வரதன் என்ற புது முகமும் இதில் தோன்றுமாம்.

புது முகம் என்றவுடன், நினைவு வருகிறது. ஆசார்யா 'கடக'த்திற்காக கண்டெடுத்த புது முகம் (விஜயகுமார்) பழைய முகமாகப் போகிறதாம். அம்பா பிலிம்ஸார் தயாரிக்கும் பேசாமடந்தையை பேச வைக்கும் பாத்திரமாகப் போகிறாராம் இவர்.

### சென்னையில்

ஜெமினியாரின் பிரபல இலக்கிய சிருஷ்டியான, ஔவையார் படப்பிடிப்பு ஆரம்பமாகி விட்டதாம். திறமைமிக்க டைரக்டர் முருகதாஸா தான் தமிழ் மூதாட்டியை வளர்க்கும் பாரமேற்றிருக்கிறாராம். கே. பி. சுந்தராம்பாள் ஔவை யென்பது பழைய கதை தானே.

ஔவைக்கான வசன சிருஷ்டிக்காக வாஸன் ஒரு போட்டி நடத்தினாரல்லவா? படப்பிடிப்பிற்கு யாருடைய சிருஷ்டி ஸ்வீகரிக்கப்பட்டதோ தெரியவில்லை. ஒரு வேளை அவியலாகச் செய்து விட்டாரோ என்னமோ.

சென்னை ஸ்டுடியோக்களில் துரிதமாக வேலைசெய்து, படங்களை வெளியிட்டபடியே இருப்பது ப்ரகதி ஒன்றுதான். இங்கு தயாரிக்கப்பட்டுவந்தராஜயோகி துரிதமாக முன்னேறுகிறாராம். வெகு நாட்களுக்குப்பிறகு பாகவதரின் கானாமிர்தம் ரஸிகர்களுக்கு இராஜயோகியால் கிடைக்கப்போகிறதாம்.

கந்தன் கம்பெனியார் தயாரிக்கும் ஜீவகனும் ஆரம்பமாகி விட்டதாம். இதில் ஹொன்னப்பாவும், ஜீவரத்னமும் பிரதம பாகங்களில் தோன்றுவார்களாம். நாடக உலக நக்ஷத்திரங்களான டி. கே. சம்பங்கியும், எஸ். எஸ். ராஜேந்திரனும் கூட இதில் தோன்றப் போவதாக அறிகிறோம். கவியின் கனவு ஆசிரியர் எஸ். டி. சுந்தரம் ஜீவகனின் வசன கர்த்தா பொறுப்பேற்றிருக்கிறாராம்.

சேலம் மாடர்ன் பிக்சர்ஸாரின் முதல் படமான 'மஞ்சுளாவும்' இங்கு சுடப்படுகிறாளாம். பி. எஸ். கோவிந்தனும், மித்ரவிந்தா என்ற புது முகமும் காக்ஷியளிக்கிறார்களாம். விமர்சனம் என்ற சினிமா பத்திரிகை ஆசிரியராயிருந்த நளன் முயற்சியால் வளருகிறாளாம் 'மஞ்சுளா'.

நவரஸங்களில் தலையானது சிருங்காரம் என்பது பெரியோர் கருத்து. சிருங்கார ரஸத்தை விரஸமின்றி கையாண்டு பெயர் பெற்ற வடமொழி ஆசிரியர்களில் காளிதாஸன் முக்கியமானவர். அவரது நாடகசிருஷ்டிகளில் முழுதும் சிருங்காரரஸமே நிறைந்திருக்கும், சிருஷ்டி 'மாளவிகா.' ப்ரகதி பிக்சர்ஸார் இம்மாளவிகாவை திரையில் காக்ஷியளிக்கச் செய்யப் போகிறார்களாம். வசந்தகோகிலமும், கே. ஆர். ராமசாமியும் இதற்காக ஒப்பந்தம் செய்யப்பட்டுவிட்டார்களாம். எச். வி. பாபு மேல் பார்வையில் மாளவிகா மளமளவென்று வளருவாளென்று எதிர் பார்க்கலாம்.



நாம் இருவரில்
மிஸ்டர் ஹனுமந்த ராவ்

சென்னை நியூடோன் ஸ்டுடியோவில் கிருஷ்ணபக்திக்கான படப்பிடிப்பு தொடர்ந்து நடக்கிறதாம். குபேர குசேலா டைரக்டர் ஆர். எஸ். மணி டைரெக்ஷனில் நெடு நாட்களாக தயாராகிவரும் படம் இது.

வெகு காலத்திற்கு பிறகு இங்கு தயாரிக்கப்படவிருக்கும் ஒரு படத்தில் ஜி. சுப்புலெக்ஷிமி தோன்றப் போகிறாராம் இவருடன் புது முகமாக கடகத்தில் காக்ஷியளிக்கப் போகும் விஜயகுமாரும் தோன்றுவாராம்.

சோபனசலா ஸ்டுடியோவிலும், சேர்ந்தாற்போல் அரை டஜன் படங்கள் சுடப்படுகின்றனவாம்.



'துளசி ஜலந்தரில்' சின்னப்பா இப்படித் தோன்றுகிறாராம். இதன் திருச்சி ஜில்லா விநியோக உரிமையை திருச்சி நந்தினி பிக்சர்ஸ் சார் பெற்றிருக்கின்றனர்.

---

ஸி. வி. ராமன் டைரெக்ஷனில் தயாராகிவந்த, பொன்னுருவி முடிவடைந்து விட்டதாம். கொத்தமங்கலம் சீனு, கே. டி. ருக்மணி தோன்றும் அசல் புராணப் படமாம் பொன்னுருவி.

இதே ஸ்டுடியோவில், கண்ணபிலிம்ஸாரின் திருமழிசை ஆழ்வாரும் வளர்ந்து வருகிறாராம். நந்தனுருக்குப் பிறகு தேசிகர் ஆழ்வாராகத் தோன்றி சக்கைப்போடு போடுகிறாராம். குமாரி கல்யாணி, 'கவியின் கனவு' சுப்பையா போன்றவர்களும் வெகு கச்சிதமாக நடித்துவருகிறார்களாம். புது வருஷத்தின் மகத்தான ஒரு தயாரிப்பாக, 'திருமழிசை ஆழ்வார்' திகழ வேண்டுமென்பதற்காக, டைரெக்டர் செட்டியார் பிரயாசையுடன் கவனித்து வருகிறாராம். விரைவில் முடிவடைந்து விடுமெனத் தெரிகிறது.

அம்பிகா பிலிம்ஸின் தன அமராவதி குமரேசன், சரோஜா இருவர்களின் நக்ஷத்திர மதிப்பை இன்னும் சற்று உயர்த்துமெனச் சொல்லப்படுகிறது. பி. எஸ். ராமையா கண்காணிப்பில் இவ்விருவரும் தன அமராவதியில் அபாரமாக நடித்திருக்கிறார்களாம்

### அரங்க மேடையில்

சென்னை திருவல்லிக்கேணிகலைச் சங்கத்தின் ஆதரவில், கு.சா. கிருஷ்ணமூர்த்தி எழுதிய 'அந்தமான் கைதி' என்ற நாடகம், விக்டோரியா பொதுஜன மண்டபத்தில் பிப்ரவரி 16உ நடிக்கப்படுமாம். இந்நாடக வசூல் முழுதும், தீரர் சத்யமூர்த்தி ஞாபகார்த்த நிதிக்கு அளிக்கப்படுமென்றும் தெரிகிறது. நாடகம் முழுதும் ஒரு புது முறையில் அமைக்கப்பட்டிருக்கிறதாம்.

தஞ்சை கிருஷ்ணன் நாடகசபையார் சென்ற பல மாதங்களாக நடத்திவந்த 'ஓர் இரவை' 168வது நாடகமாகசிவஞானகிராமணியார் தலைமையில் முடித்துக்கொண்டு 'வேலைக்காரி'க்கான வேலைகளில் ஈடுபட்டு விட்டார்களாம். வருகிற 12உ முதல் வேலைக்காரி மேடையில் தோன்றுவாளாம்.

சிறுவர் பகுதி

"மிருத்யு"

"ஜிம்மி" "காளி" "அளகு" "வள்ளி" "முருவன்" "முனியன்" "மருதை" "சடையன்"

# அமெரிக்காவில் கோஷ்டிகள்!

"என்னடாது சுத்த மோசமா இருக்கு...பொழுதே போக மாட்டேங்குது" என்று கொட்டாவி விட்டுக்கொண்டிருந்தான் காளி.

"ஆமடா...நம்ம ஊருக்குள்ளேயே சுத்திச் சுத்தி அலுத்துப் போச்சு" என்ருன் முனியன்.

"டேய் நம்ம ஊருக்குத் தூங்குமூஞ்சி சர்க்கஸ் கம்பெனி வரப் போகுதாம்" என்று குதித்துக் கொண்டு வந்தான் அளகு.

"ஆமா பேரைப் பாத்தாலே சகிக்கல்லே-அவங்க சர்க்கஸூம் அப்படித்தான் தூங்கி வளியும்" என்ருன் முருவன்.

அதற்குள் மருதை "முருவா நான் கிருஸ்மஸ் லீவுக்கு மெட்ருஸ் போயிருந்தபோது அங்கே ஒரு இங்கிலீஷ் சினிமா பாத்தேன். அதிலே சர்க்கஸ் காண்பிச்சான். என்னமா இருந்ததுங்கறே. நினேச்சாலே பயமா இருக்குது. சிங்கம் புலி எல்லாம் அவங்க சொல்றபடி ஆடறது" என்ருன்.

"அவங்களுக்கென்னப்பா....... அமெரிக்கா தான் நம் புராணத்திலே சொல்ற இந்திரலோகம்னு எங்க அப்பாரு சொல்வாரு"

"ம் அதெல்லாம் சுத்தப் புளுகு ...எல்லாம் ஏமாத்ரவேலே. சினிமாவிலே பாக்கிறதை நம்பிட்டயோ?" என்ருன் அளகு.

"அடே போடா ரொம்பத் தெரிஞ்சவன் கணக்கா பேசாதே?" என்று அதட்டினுன் மருதை.

ஆனல் அளகு சளேக்காமல் "என்ன 'பெட்' கட்டறே. நான் அதெல்லாம் சுத்த 'அம்பக்'ம்பேன்."

மருதைக்குப் பிரமாத கோபம் வந்து விட்டது. "நான் நிரூபித்து விட்டேன்னு நீ எனக்கு நூறு முட்டிக்கால் தோப்புக்கரணம் போடனும், என்ன" என்று சவால் விட்டான்.

இவர்கள் தகராரைப் பார்த்த முருவனுக்குச் சிரிப்பு வந்தது "அது சரி....எப்படியப்பா நீங்க உங்க கட்சியை நிரூபிக்கப் போறீங்க. எந்தக் கப்பல்லே அமெரிக்காவுக்கு பயணம்?" என்ருன்.

"கப்பல் பிரயாணம் எதுக்காம். நம்ம மலேமுளுங்கியை மறந்துட்டியோ?

"ஓ சரிதான்...அப்ப பிரயாணத்துக்குப் பெரிசாத் திட்டம் போட்டுட்டயா?"

"சரியான யோசனேதான் ஒங்க தகராறு வந்தாலும் வந்தது நமக்குப் பொழுது போக நல்ல சந்தர்ப்பம் எனக்கும் அமெரிக்காவைப் பாக்கணும்னு ரொம்ப நாளா ஆசை!" என்று குதித்தான் காளி.

"ம்....சரி மலேமுளுங்கிக்கும் வேலேகொடுத்து ரொம்பநாளாச்சு. நாமும் கலாட்டாபண்ணி நாளாச்சு" என்று முருவன் மோதிரத்தைத் தேய்த்தான்

உடனே "பிரபுவே உத்திரவு" என்று மலேமுளுங்கி தோன்றி மண்டியிட்டான்.

அவனேப்பார்த்த முருவன் "என் மலேமுளுங்கி ஒரு மாதிரியா இருக்கே" என்ருன்.

"பிரபுவே ஒரு மாசமா எனக்குப் பொழுதே போக வில்லே நீங்கள் ஏதாவது உத்திரவு கொடுக்க மாட்டீர்களா என்று காத்திருந்து அலுத்துவிட்டேன் நல்ல வேளேயாக......"

"அடடே.........உனக்குக்கூட வேலே இல்லாதது சோம்பலாக இருந்ததா? சபாஸ்! உனக்கு நல்ல வேலே காத்திருக்கிறது. நாங்களெல்லாம் இப்போ அமெரிக்கா போகணும்...என்ன சொல்றே?

மலேமுழுங்கி தலேயைச்சொறிந்தபடி "பிரபுவே உங்களே அமெரிக்கா கொண்டுசேர்ப்பது கஷ்டமான காரியமல்ல. அங்குபோனுல் தொந்தரவு ஏற்படுமே என்றுதான் யோஜிக்கிறேன்."

"என்ன தொந்தரவு" என்றன கோஷ்டிகள் ஏக காலத்தில்.

"நம்மை வைத்துக்கொண்டு அவர்கள் சினிமா பிடிக்க ஆரம்பித்து விடுவார்கள். அதுவும் என்னேப்பார்த்தால் ஆபத்துதான்"

"இவ்வளவுதானே.....ஷோக்கா ஆக்ட் பண்ணலாமே"

"சொன்னேன்....பிறகு உங்கள் இஷ்டம்........போகலாமல்லவா" என்று மண்டியிட்டான் மலே முளுங்கி.

முருவனும் மருதையும் தலேயசைக்கவே மலேமுளுங்கி ஒரு பயங்கரமான சத்த மிட்டான்.

கண்மூடி கண் திறந்தபோது கோஷ்டிகள் புது இடத்தில் இருப்பதை அறிந்தார்கள். கோஷ்டிகள் அமெரிக்கா வந்துவிட்டன.

அளகு அருகிலுள்ள கட்டிடத்தை அண்ணாந்துபார்க்கப்போய் தொப்பென்று கீழே விழுந்தான். அப்போதுதான்-கீழே படுத்தபடி-அவனுல் கட்டிடத்தின் உச்சியைப் பார்க்க முடிந்தது அவ்வளவு உயரம்.

முனியன் அக்கட்டிடத்து மாடிகளே எண்ண ஆரம்பித்து தலேவலியை வரவழைத்துக்கொண்டான்.

கோஷ்டிகள் அமெரிக்காவைப் பார்த்து மலேத்து விட்டனர். பிரம்மாண்டமான கட்டிடங்களேயும், ஆர்ப்பாட்டமான விளக்குகளேயும் ஈசல்போல மோட்டார்கள் பாய்ந்து பாய்ந்து போவதையும் கண்டு பிரமித்து விட்டன.

"என்னடா இவ்வளவு அமக்களமான இடத்திலே நாம் எப்படடா....நம்மை யார் இங்கே சட்டைபண்ணப் போரா?" என்று திகைத்தான் அளகு.

"இது நியூயார்க் இங்கே இப்படித்தான் இருக்கும் நமக்குவேலே இல்லே. வந்த காரியத்தைப் பாருங்க. நம்ம மலேமுளுங்கியைக் கூப்பிட்டு பெரிய சர்க்கஸ் கம்பெனி எங்கே டேரா போட்டிருக்கோ அந்த ஊருக்கு கொண்டுவிடச் சொல்" என்ருன் மருதை.

அதேபோல மலேமுளுங்கி வரவழைக்கப்பட்டு உத்திரவிடப்பட்டான். கோஷ்டிகளும் வேறு இடத்தில் இருப்பதை உணர்ந்தார்கள். அதுவும் ஒரு பெரிய சர்க்கஸ் கொட்டகையின் முன்னுல்!

கோஷ்டிகள் நேரத்தை வீணுக்காமல் தங்கள் உடைகளே மலேமுளுங்கியின் உதவியால் மாற்றிக் கொண்டன. ஆங்கிலத்தில் சரளமாகப் பேசவும் மலேமுளுங்கி வரமளித்தான்.

மேலே நடக்கும் வேடிக்கைகளேத் தொடர்ந்து படியுங்கள்.

---

(2-ம் பக்கத்தொடர்ச்சி)

காலயத்தில் இவ்வளவு பொறுமையற்றவர்கள் யாருமில்லே."

"சரிதான் அதனுல்தான் என்னேச் சேர்த்துக்கொள்ள விருப்பம்போலும்!"

"விளேயாட்டு வேண்டாம். முதலில் நூறு கொடுக்கிறோம். திருப்திகரமாக நடந்துகொண்டால் பின்பு வேண்டிய மட்டும் தருவோம்—ஆனுல் சம்பளம் மட்டும் நூறு நூறுதான். அதிகப்படி கொடுத்தால் அது இனும்! அது என் சொந்தக் கணக்கில்!"

மோஹன் சிறிது நேரம் யோசிப்பவன்போல் பாவனேசெய்தான். இதனிடையே லட்சுமி பாயின் குறிப்பையுணர்ந்த ராமநாதன்—"தாங்கள் சற்று நேரம் இங்கேயே இருங்கள். நான் இதோ வந்துவிட்டேன்' என்று மெதுவாக நழுவினுர்.

லட்சுமியின் இதழ்களில் குறும்புப் புனனகை தவழ்ந்தது. அதைக் கண்டதும் மோஹனின் கண்கள் சிரித்தன. "மோஹன்! இப்போது சொல்லு... அழகியா இல்லேயா?"–என்ருள் லட்சுமி.

# புதிய புத்தகங்கள்



**'சக்தி' பொங்கல் மலர்**

**விலை ரூ. 1—0—0**

பொங்கல் புதுநாளை இன்பமயமாக கழிக்க ரஸிகர்களுக்கு சக்தி காரியாலயத்தார் அளித்த பரிசு இம்மலர். கனம் மந்திரி அவினாசிலிங்கம் முதல், பல பிரபல எழுத்தாளர்களின் மாறுபட்ட பலதரப்பட்ட விஷயதானங்களை இம்மலர் தாங்கிநிற்கிறது. அபூர்வமான சில புகைப்படக்காக்ஷிகள் இயற்கை வர்ணம் தீட்டப்பட்டு சுகி, சுப. நாராயணன் போன்றவர்களின் கருத்துக்களை இம் மலரில் நாம் அவசியம் காணவேண்டும். சுமார் 120 பக்கங்கள்கொண்ட இம் மலரின் விலை ரூ. 1/- ரொம்பவும் குறைவுதான்.

**'பேசும் படம்' பொங்கல் மலர்**

**விலை ரூ. 2—8—0**

சினிமா உலகில்பிரசித்தமான 'பேசும் படம்' கண்ணைக்கவரும் பல அழகிகளின் பேசாத படங்கள், மூவர்ணத்தாலும், ஒரு வர்ணத்தாலும் காக்ஷியளிக்கின்றன. சினிமா தொழில் சம்பந்தமான விரிவான கருத்துரைகளும் போதனைகளும் இடம் பெற்றுள்ளன. 'கலை உலகில்' பேசும் படம் டைரி போன்றவை முக்கியமான உபயோகமான பகுதிகள் முழுதும் ஆர்ட் காகிதத்தில் பல வர்ணப்படங்களுடன் அச்சிடப்பட்டுள்ள இம்மலருக்கு விலை ரூ. 2½/- வெகு அதிகமென்று சொல்வதிற்கில்லை.

**'சினிமா உலகம்' பொங்கல் மலர்**

**விலை ரூ. 1—0—0**

வழக்கம்போல் 'சினிமா உலகம்' செட்டியாரின் பொங்கல் விசேஷ வெளியீடு இது. ரஸமான கட்டுரை, கவிதைகளும், நிறைய சினிமாச் செய்திகளும் தொகுத்தளிக்கப்பட்டிருக்கின்றன. சில ஆர்ட்படங்களும் உண்டு. யாரோ எழுத மறந்ததை இதில் ஒருவர், (நை. பா.) எழுதியிருக்கிறார். படித்து ரஸிக்க வேண்டிய மலர்தான்.

**"போரம்" சுதந்திர மலர்**

பம்பாயிலிருந்து வெளிவரும் "போரம்" வாரபத்திரிகையின் இம் மலர் உலகெங்கிலும் சுதந்திரப் போராட்டத்தைக் குறிக்கும் அழகிய மூவர்ண முகப்புப்படத்துடனும், திரு. பட்டாபி சீதாராமய்யா, கே. ராம ராவ், பிராங்க் ஆன்னி போன்றவர்களது கட்டுரைகளுடனும், படங்களுடன் அழகாக மிளிர்கிறது.

**'சுதந்திர வீரன்'**

**வாரப்பதிப்பு விலை தனிப்பிரதி அணா 2**

ஜே. பி. ராட்ரிக்கை ஆசிரியராகக் கொண்டு சென்னையிலிருந்து மறுமலர்ச்சியுற்று வெளிவரும் தேசீய வாரப்பத்திரிகை. 'சுதந்திரவீரன்' 25-1-47 இதழில் 'ராஜாஜி'யின் வாழ்க்கை சம்பவங்களை 'மணி' நன்கு விளக்கியிருந்தார். தமிழ் நாட்டின் சுதந்திரத்திற்கும் வீரத்திற்கும் உழைப்பதுடன் 'சுதந்திர வீரன்' சினிமா நேயர்களின் கேள்விகளுக்கும் பதில் கூறப்போகிறதாம்.

திருவாரூர் ஆலயப்பிரவேசத்தை முன்னின்று நடத்தியவர்



வடபாதி மங்கலம் தியாகராஜ முதலியார்

**நவகாளியில் காந்திஜி!**

[ஆசிரியர் வாசுதேவன் - பாரதமாதா பிரசுராலயம், துறையூர். விலை ரூ. 1—8—0]

தமிழில் அரசியல் குறிப்புகள், செய்தி விமர்சனச் சேர்க்கைகள் ஆகியவை புத்தக ரூபத்தில் இது வரை அநேகமாக ஒன்றும் வந்ததில்லை என்றே கூறலாம். திரு. வாசுதேவன் அவர்களது இந்த முயற்சி தமிழ் எழுத்துலகில் புதியபாதையொன்று இருப்பதையும் மற்றோருக்கு எடுத்துக்காட்டுகிறது எனலாம்! இப் புத்தகத்தில் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கும் பொருள் (பாகிஸ்தானும் அதன் எதிரொலிகளும்) கொஞ்சம் தேய்ந்து போனதாக இருப்பினும், மகாத்மாவின் சமாதான யாத்திரைச் செய்திக் குறிப்புகளுடன் சேர்ந்து நல்ல கோவையாகியிருக்கிறது. அரசியல் நிர்ணய சபை நடவடிக்கைகள் போன்ற பல முக்கியமான விஷயங்கள் தமிழில் செய்தி விமரசனக் குறிப்புகளாகச் சேர்த்து வெளியிடப்பட வேண்டிய அவசியமிருக்கிறது. ஆகவே வாசுதேவனது முயற்சியைப் போன்ற பலவும் வரவேற்கத் தக்கவை.

**காஞ்சி சிவ, விஷ்ணு ஆலயத் திரட்டு**

(விலை அணா 4. கணபதி வாசகசாலை, காமாட்சி அம்மன் தெரு, காஞ்சிபுரம்)

காஞ்சி சிவ, விஷ்ணு ஆலயங்களின் பற்பல பகுதிகளையும், சிறிய கோவில்களையும் பற்றிப் பௌராணிகமான குறிப்புகள் இருக்கின்றன. முக்கியமாக கவனிக்கப்படவேண்டியது புத்தக முடிவில் "ஆலய ஊழல்களின் அறிவிப்பு" என்ற தலைப்பில் எழுதப்பட்டிருக்கும் விஷயம். தற்போது ஆலயங்களிலும், அவற்றின் நிர்வாகத்திலும் இருந்து வரும் ஆன்மீக, சுகாதாரக் குறைகளை நீக்கவேண்டியதன் அவசியத்தை இந்தப் பகுதி வற்புறுத்துகிறது.





Printed at the Trichinopoly United Printers Limited., Trichinopoly, and Published by T. Sivagnanam (Editor).